உ

கணபதி துணை.



# விநாயகர்

# பனுவல் திரட்டு



திரு. வி. உலகநாத முதலியார் அவர்கள்

திரட்டியது.




இரண்டாம் பதிப்பு

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

சுக்கில ஞு 1929

விலை அணா 6.

3-2

உ

கணபதி துணை.

# விநாயகர் பனுவல் திரட்டு.

---

நம்பியாண்டார் நம்பி

அருளிச்செய்த

## திருநாரையூர்
## விநாயகர் திருவிரட்டைமணிமாலை

(பதினோராந் திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

என்னை நினைந்தடிமை கொண்டென் னிடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்—புன்னை
விரசு மகிழ்சோலை வியனாரை யூர்முக்கண்
அரசுமகி ழத்திமுகத் தான். க

முகத்தாற் கரியனென் றாலுந் தனையே முயன்றவர்க்கு
மிகத்தான்வெளியனென்றேமெய்ம்மையுன்னும்விரும்படியார்
அகத்தான் றிகழ்திரு நாரையூ ரம்மான் பயந்தவெம்மான்
உகத்தா னவன்ற னுடலம் பிளந்த வொருகொம்பனே. உ

கொம்பனைய வள்ளி கொழுநன் குறுகாமே
வம்பனைய மாங்கனியை நாரையூர்—நம்பனையே
தன்னவலஞ் செய்துகொளுந் தாழ்தடக்கை யாயென்னைப்
பின்னவலஞ் செய்வதெனோ பேசு. ங

பேசத் தகாதெனப் பேயெரு தும்பெருச் சாளியுமென்
றேசத் தகும்படி யேறுவ தேயிமை யாதமுக்கட்
கூசத் தகுந்தொழி லுங்கையு நுந்தையு நீயுமிந்தத்
தேசத் தவர்தொழு நாரைப்ப தியுட் சிவக்களிறே. ச

களிறு முகத்தவனைக் காயஞ்செந் தீயி
னொளிறு முருக்கொண்ட தென்னே—யளறுதொறும்
பின்னுரை யூரார லாரும் பெரும்படுகர்
மன்னுரை யூரான் மகன். ரு

மகத்தினின் வானவர் பற்கண் சிரந்தோ ளெரித்தருளுஞ்
சுகத்தினி னீள்பொழி னாரைப் பதியுட் சுரன்மகற்கு
முகத்தது கையந்தக் கையது மூக்கந்த மூக்கதனி
னகத்தது வாயந்த வாயது போலு மடுமருப்பே. சு

மருப்பையொரு கைக்கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பையடி போற்றத் துணிந்தா—னெருப்பை
அருந்தவெண்ணு கின்றவெறும் பன்றே யவரை
வருந்தவெண்ணு கின்ற மலம். எ

மலஞ்செய்த வல்வினை நோக்கி யுலகை வலம்வருமப்
புலஞ்செய்த காட்சிக் குமரற்கு முன்னே புரிசடைமேல்
சலஞ்செய்த நாரைப் பதியான் றன்னைக் கனிதரவே
வலஞ்செய்துகொண்டமதக்களிறேயுன்னைவாழ்த்துவனே.

வனஞ்சாய வல்வினைநோய் நீக்கி வனசத்
தனஞ்சா யலைத்தருவா னன்றோ—வினஞ்சாயத்
தேனையூர் நம்பர்மகன் றிண்டோ ளெரித்தருளு
நாரையூர் நம்பர் மகனும். கூ

நாரணன் முன்பணிந் தேத்தநின் றெல்லை நடாவியவத்
தோரண வுந்திரு நாரையூர் மன்னு சிவன்மகனே

காரண னேயெங் கணபதி யேநற் கரிவதனா
ஆரண நுண்பொரு ளேயென்ப வர்க்கில்லை யல்லல்களே.

அல்லல் களைந்தான்ற னம்பொ னுலகத்தின்
எல்லை புகுவிப்பா னீண்டுழவர்—கொல்லல்களை
செங்கழுநீர் கட்குந் திருநாரை யூர்ச்சிவன்சேய்
கொங்கெழுதா ரைங்கரத்த கோ. ௧௧

கோவிற் கொடிய நமன்றமர் கூடா வகைவிடுவன்
காவிற் றிகழ்திரு நாரைப் பதியிற் கரும்பனைக்கை
மேவற் கரிய விருமதத் தொற்றை மருப்பின்முக்க
ணேவிற் புருவத் திமையவன் றன்பெற்ற யானையையே.

யானைத் தியவெண்பா வென்னை நினைந்தடிமை
தானே சனார்த்தனற்கு நல்கினான்—தேனே
தொடுத்தபொழி னாரையூர்ச் சூலம் வலனேந்தி
எடுத்த மதமுகத்த வேறு. ௧௩

ஏறிய சீர்வீ ரணக்குடி யேந்திழைக் கும்மிருந்தேன்
நாறிய பூந்தார்க் குமாற்கு முன்னினை நண்ணலரைச்
சீறிய வெம்பணைச் சிங்கத்தி னுக்கிளை யானைவிண்ணோர்
வேறியல் வாற்றொழு நாரைப் பதியுள் விநாயகனே. ௧௪

கனமதில்சூழ் நாரையூர் மேவிக் கசிந்தார்
மனமருவி னன்பயந்த வாய்ந்த—சினமருவு
கூசாரம் பூண்டமுகக் குஞ்சரக்கன் றென்றார்க்கு
மாசார மோசொல்லு வான். ௧௫

வானிற் பிறந்த மதிதவ ழும்பொழின் மாட்டளிசூழ்
தேனிற் பிறந்த மலர்த்திரு நாரைப் பதிதிகழுங்
கோனிற் பிறந்த கணபதி தன்னைக் குலமலையின்
மானிற் பிறந்த களிறென் றுரைப்பரிவ் வையகத்தே. ௧௬

வையகத்தா ரேத்த மதிஞரை யூர்மகிழ்ந்து
பொய்யகத்தா ருள்ளம் புகலொழிந்து—கையகத்தோர்
மாங்கனிதன் கொம்பண்டம் பாசமழு மல்குவித்தா
ஞங்கனிநஞ் சிந்தை யமர்வான். கஎ

அமரா வமரர் தொழுஞ்சா ஞரைப் பதியமர்ந்த
குமரா குமரற்கு முன்னவ னேகொடித் தேரவுணர்
தமரா சறுத்தவன் றன்னுழைத் தோன்றின னேயெனநின்
றமரா மனத்தவ ராழ்நர கத்தி லழுந்துவரே. கஅ

அவமதியா துள்ளமே யல்ல லறநல்ல
தவமதியா லேத்திச் சதுர்த்தோ—நவமதியாங்
கொம்பன் விநாயகன்கொங் கார்பொழில்சூழ் நாரையூர்
நம்பன் சிறுவன்சீர் நாம். கசூ

நாந்தன மாமன மேத்துகண் டாயென்று நாண்மலராற்
ரூந்தன மாக விருந்தன ஞரைப் பதிதன்னுளே
சேர்ந்தன னேயைந்து செங்கைய னேநின் றிரண்மருப்பை
ஏந்தின னேயென்னை யாண்டவ னேயெனக் கென்னை
[யனே. உ0

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதி துணை

கபிலதேவநாயனார்

அருளிச்செய்த

# மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை

## (பதினோராந் திருமுறை)

---

திருச்சிற்றம்பலம்.

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கும்
ஆதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை. க

கைக்கும் பிணியொடு காலன்றலைப்படு மேல்வையினில்
எய்க்குங்கவலைக்கிடைந்தடைந்தேன்வெம்மைநாவளைக்கும்
பைக்கு மரவரை யான்றந்த பாய்மத யானைபத்துத்
திக்கும் பணிநுதற் கட்டிரு வாளன் றிருவடியே. உ

அடியமர்ந்து கொள்வாயே நெஞ்சமே யப்பம்
இடியவலோ டெள்ளுண்டை கன்னல்—வடிசுவையில்
தாழ்வானை யாழ்வானைத் தன்னடியா ருள்ளத்தே
வாழ்வானை வாழ்த்தியே வாழ். ங

வாழைக் கனிபல வின்கனி மாங்கனி தாஞ்சிறந்த [தும்
கூழைச் சுருள்குழை யப்பமெள் ளுண்டையெல் லாந்துறுத்
பேழைப் பெருவயிற் றோடும் புகுந்தென் னுளம்பிரியான்
வேழத் திருமுகத் துச்செக்கர் மேனி விநாயகனே. ச

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
விண்ணிற்கு மண்ணிற்கு நாதனுமாந் தன்மையினல்
கண்ணிற் பணிமின் கனிந்து. ரு

கனிய நினைவொடு நாடோறுங் காதற் படுமடியார்க்
கினிய னினியொரு வின்னுங் கிலமெவ ரும்வணங்கும்
பனிவெண் பிறைநறுங் கொன்றைச் சடைப்பலி தேரியற்கை
முனிவன் சிறுவன் பெருவெங்கொல் யானை முகத்தவனே.

யானை முகத்தான் பொருவிடையான் சேயழகார்
மான மணிவண்ணன் மாமருகன்—மேனிகழும்
வெள்ளக் குமிழி மதத்து விநாயகனென்
உள்ளக் கருத்தி னுளன். எ

உளதள வில்லதோர் காதலென் னெஞ்சில்வன் னஞ்சமுண்ட
வளரிள மாமணி கண்டன்வண் டாடுவண் கோதைபங்கத்
திளவளர் மாமதிக் கண்ணியெம் மான்மகன் கைம்முகத்துக்
களகள மாமதஞ் சேர்களி யானைக் கணபதியே. அ

கணங்கொண்ட வல்வினைகள் கண்கொண்ட நெற்றிப்
பணங்கொண்ட பாந்தட் சடைமேன்—மணங்கொண்ட
தாதகத்த தேன்முரலுங் கொன்றையான் றந்தளித்த
போதகத்தின் றாள்பணியப் போம். கூ

போகபந் தத்தந்த மின்றிநிற் பீர்புனை தார்முடிமேல்
நாகபந் தத்தந்த நாளம் பிறையிறை யான்பயந்த
மாகபந் தத்தந்த மாமழை போன்மதத் துக்கதப்போர்
ஏகதந் தத்தெந்தை செந்தா ளிணைபணிந் தேத்துமினே.

ஏத்தியே யென்னுள்ள நிற்குமா லெப்பொழுது
மாத்தனிவெண் கோட்டு மதமுகத்துத்—தூத்தழல்போல்

செக்கர்த் திருமேனிச் செம்பொற் கழலங்கை
முக்கட் கடாயானை முன். கக

முன்னிளங் காலத்தி லேபற்றி னேன்வெற்றி மீனுயர்த்த
மன்னிளங் காமன்றன் மைத்துன னேமணி நீலகண்டத்
தென்னிளங் காய்களி றேயிமை யோர்சிங்க மேயுமையாள்
தன்னிளங் காதல னேசர ணுவுன் சரணங்களே. கஉ

சரணுடையே னென்று தலைதொட் டிருக்க
முரணுடையே னல்லேனுன் முன்னந்—திரணெடுங்கோட்
டண்டத்தா னப்புறத்தா னானைமுகத் தானமரர்
பண்டத்தான் றாள்பணியாப் பண்டு. கங

பண்டந்த மாதரைத் தாமென் றினியன வேபலவுங்
கொண்டந்த நாள்குறு காமைக் குறுகுவர் கூருணர்வில்
கண்டந்த நீண்முடிக் கார்மத வார்சடைக் கற்றையொற்றை
வெண்டந்த வேழ முகத்தெம் பிரானடி வேட்கையரே. கச

வேட்கை வினைமுடித்து மெய்யடியார்க் கின்பஞ்செய்
தாட்கொண் டருளு மரன்சேயை—வாட்கதிர்கொள்
காந்தார மார்பிற் கமழ்தார்க் கணபதியை
வேந்தா வுடைத்தமரர் விண். கரு

விண்ணுத னுங்கிய விண்ணுமண் ணுஞ்செய் வினைப்பயனும்
பண்ணுத னுங்கட னென்பர்மெய் யன்பர்கள் பாய்மதமா
கண்ணுத லுங்கிய நஞ்சமுண் டார்கரு மாமிடற்றுப்
பெண்ணுத னும்பிரி யாவொரு பாகன் பெருமகனே. கசு

பெருங்காத லென்னோடு பொன்னோடை நெற்றி
மருங்கார வார்செவிகள் வீசி—யொருங்கே
திருவார்ந்த செம்முகத்துக் கார்மதங்கள் சோர
வருவான்ற னாமம் வரும். கஎ

வருகோட் டருபெருந் தீமையுங் காலன் றமரவர்கள்
அருகோட் டருமவ ராண்மையுங் காய்பவன் கூர்ந்தவன்பு
தருகோட் டருமா பிறப்பத்தர் சித்தத் தறியணையும்
ஒருகோட் டிருசெவி முக்கட்செம் மேனிய வொண்களிறே.

களியானைக் கன்றைக் கணபதியைச் செம்பொன்
ஒளியானைப் பாரோர்க் குதவு—மளியானைக்
கண்ணுவதுங் கைத்தலங்கள் கூப்புவது மற்றவன்றாள்
நண்ணுவது நல்லார் கடன். ககூ

நல்லார் பழிப்பி லெழிற்செம் பவளத்தை நாணநின்ற
பொல்லா முகத்தெங்கள் போதக மேபுர மூன்றெரித்த
வில்லா னளித்த விநாயக னேயென்று மெய்ம்மகிழ
வல்லார் மனத்தன்றி மாட்டா ளிருக்க மலர்த்திருவே. உ௦

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதி துணை.

அதிராவடிகள்

அருளிச்செய்த

# மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை

(பதினோராந் திருமுறை)

---

அகவல்.

ஒருநெடுங் கங்கை யிருங்குறும் பைம்புகர்
மும்முகச் செந்நுதி நாலிணர் வெண்ணிணக்
குடற்புலவு கமழு மடற்கழுப் படையவன்
மதலை மாமதந் துவன்றிய கதனுடைக்
கடதடக் கபோலத் தோரிட மருப்பிற்
கரண்டக வுதரத்து முரண்டரு குழவிதன்
சேவடி யுகள மல்ல
தியாவையு மிலமினி யிருநிலத் திடையே. க

வெண்பா.

நிலந்துளங்க மேருத் துளங்க நெடுவான்
தலந்துளங்கச் சப்பாணி கொட்டுங்—கலந்துளங்கொள்
காமாரி யீன்ற கருங்கைக் கடதடத்து
மாமாரி யீன்ற மணி. உ

கட்டளைக்கலித்துறை.

மணிசிந்து கங்கைதன் மானக் குருளையை வாளரக்கர்
அணிசிந்தவென்றவெம்மையர்க்கிளங்கன்றையங்கரும்பின்
துணிசிந்தவாய்ப்பெய்தபோதகத்தைத்தொடர்ந்தோர்பிறவிப்
பிணிசிந்துகார்முளையைப்பிடித்தோர்க்கில்லைபேதுறவே. ௩

அகவல்.

பேதுறு தகைய மல்லது தீதுறச்
செக்கர்க் குஞ்சிக் கருநிறத் தொக்கனுப்பண்
புக்க வணிரும் பொறித்தடக் கையு
முரணிய பெருந்தோட்
கொட்ட நாவி தேவிதன்
மட்டுகு தெரிய லடிமணந் தனமே. ௪

வெண்பா.

மேய வுருமிடற்றர் வெள்ளெயிற்றர் திண்சேனை
ஓய மணியூச லாடின்றே—பாய
மழைசெவிக்காற் றுந்திய வாளமர்க்க ணெந்தை
தழைசெவிக்காற் றுந்தத் தளர்ந்து. ௫

கட்டளைக்கலித்துறை.

உந்தத் தளரா வளைத்தன முன்னமின் னேடைநெற்றிச்
சந்தத் தளரா வொருதனித் தெவ்வர்தந் தாளிரியூர்
விந்தத் தளரா மருங்கிற் கிளிபெற்ற வேழக்கன்றின்
மந்தத் தளரா மலர்ச்சர ணங்கள் வழுத்துமின்னே. ௬

அகவல்.

மின்னெடுங் கொண்ட லங்நெடு முழக்கத்
தோவற விளங்கிய துளைக்கைக் கடவுளை
யாமிக வழுத்துவ தெவனோ வவனேற்
பிறந்ததிவ் வுலகின் பெருமூ தாதை
யுரந்தரு சிரமரிக் தவற்கே வரைந்தது
மேருச் சிமையத்து மீமிசை
வாரிச் செல்வன் மகண்மகன் மொழியே. ௭

வெண்பா.

மொழியின் மறைமுதலே முன்னயனத் தேறே
கழியவரு பொருளே கண்ணே—தெழிய
கலாலயனே யெங்கள் கணபதியே நின்னை
யலாதையனே சூழாதென் னன்பு. அ

கட்டளைக்கலித்துறை.

அன்புத வச்சுற்ற காரழல் கொண்டெயின் மூன்றெரிய
வன்புத வந்துந்தை மாட்டுகின் றூன்மதஞ் சூழ்மருப்பிற்
கன்புத வக்கரத் தாளமிட் டோடிக் கடுநடையிட்
டின்புத வச்சென்று நீயன்று காத்த தியம்புகவே. கூ

அகவல்.

கவவுமணிக் கேடகக் கங்கணக் கவைவனு
அறைகழ லவுணரொடு பொருத ஞான்றுநீர்
புழைக்கர முயிர்த்த வழற்பே ரூதை
விரைநனி கீறி மூரி
அஞ்சேறு புலர்த்து மென்பர்
மஞ்சேறு கயிலை மலைகிழ வோயே. கο

வெண்பா.

மலைசூழ்ந் திழிகின்ற மாசுணப் பொற்பாறை
தலைசூழ்ந்து தானினைப்ப தொக்கும்—கலைசூழ்
திரண்டகங்கொள் பேரறிவன் றிண்வயிற்றி னும்பர்க்
கரண்டகங்கொள் காலுயிர்க்குங் கை. கக

கட்டளைக்கலித்துறை.

காலது கையது கண்ணது தீயது கார்மதநீர்
மேலது கீழது நூலது வெற்பது பொற்பமைதீம்

பாலது தேனது தானது மென்மொழிப் பாவைமுப்பூண்
வேலது வாளது நான்மறைக் கின்ற விடுசுடர்க்கே. கஉ

அகவல்.

சுடர்ப்பிழம்பு தழைத்த வழற்றனி நெடுவேற்
சேய்மூ வுலகம் வலம்வர வேய
கொன்றையம் படலத் துன்றுசடைக் கணிந்த
வோங்கிருந் தாதை யைவளாய் மாங்கனி
அள்ளற் றீஞ்சுவை யருந்திய
வள்ளற் கிங்கென் மனங்கனிந் திடுமே. கங

வெண்பா.

இக்கயங்கொண் மூவலையஞ் சூழேழ் தடவரைகள்
திக்கயங்கள் பேர்ந்தாடச் செங்கீரை—புக்கியங்கு
தேனாட வண்டாடச் செங்கீரை யாடின்றே
வானுடன் பெற்ற வரை. கச

கட்டளைக்கலித்துறை.

பெற்றமெல் லோதி சிலம்பின் மகள்பெறப் பிச்சுகந்த
மற்றவள் பிச்சன் மயங்கன் முன்னேன்பின் னிணைமைமிகக்
கற்றவ னையன் புறங்காட் டிடைநட மாட்டுகந்தோ
செற்றவெண் டந்தத்தவனம்மையாட்கொண்டுசெய் தனவே.

அகவல்.

செய்தரு பொலம்படை மொய்தரு பரூஉக்
குருளை, வெள்ளெயிறு பொதிந்த வள்ளுகிர்த் திரள்வாய்ப்
பெருந்திரட் புழைக்கை
மண்முழை வழங்குந் திண்முரா ணேற்றின்
பனையடர்ப் பாகன் றனதிணையடி
நெடும்பொற் சரண மேத்த
இடும்பைப் பௌவ மினிநீங் கலமே. கரு

வெண்பா.

அலங்கன் மணிகனக முந்தி யருவி
விலங்கன் மிசையிழிவ தொக்கும்—பலன்கனிகள்
உண்டளைந்த கோன்மருடத் தொண்கடுக்கைத் தாதளைந்து
வண்டணைந்து சோரு மதம். கஎ

கட்டளைக்கலித்துறை.

மதந்தந்த மென்மொழி மாமலை யாட்டி மடங்கல்கொன்ற
மதந்தந்த முக்கண் ணரற்குமுன் னீன்றவம் மாமலைபோன்
மதந்தந்த கும்பக் குழவிமந் தாரப்பொன் னூட்டிருந்து
மதந்தந்த செம்மலன் றேவைய முய்ய வளர்கின்றதே.

அகவல்.

வளர்தரு கவட்டின் கிளரொளிக் கற்பகப்
பொதும்பர்த் தும்பி யொழிகின் றேச்சும்
பாரிடைக் குறுநடைத் தோடி ஞாங்கர்
இட்ட மாங்கனி
முழுவதும் விழுங்கிய மூளைப்பனைத் தடக்கை
எந்தை யல்லது மற்றி யாவுள
சிந்தை செய்யுந் தேவதை நமக்கே. கசு

வெண்பா.

கேளூற்றி யான்றளர வொட்டுமே கிம்புரிப்பூண்
வாளூற்ற கேயூர வாளரக்கர்—தோளூற்
றறித்தெறிந்து கொன்றழித்த வங்கயங்கண் மீண்டே
இறுத்தெறிந்து கொன்றழித்த வேறு. உ௦

கட்டளைக்கலித்துறை.

ஏறு தழீஇயவெம் புத்தேண் மருகவெங் குந்தவள
நீறு தழீஇயவெண் டோளவன் செல்வவண் டுண்ணநெக்க

வாறு தழீஇய காதலத் தையநின் றன்னை யல்லால்
வேறு தழீஇத் தொழுமோ வணங்காத வியன்சிரமே. உக

அகவல்.

சிரமே, விசும்புபோத வுயரி யிரண்டசும்பு பொழியும்மே
கரமே, வரைத்திரண் முரணிய விரைத்து விழும்மே
புயமே, திசைவிளிம்பு கிழியச் சென்று செறிக்கும்மே
அடியே, யிடுந்தொறு மிடுந்தொறு மிவ்வுலகம் பெயரும்மே
ஆயினு, மஞ்சுடர்ப் பிழம்புதழீஇ
நெஞ்சகத் தொடுங்குமோ நெடும்பனைச் சூரே. உஉ

வெண்பா.

சூர்தந்த பொற்குவட்டின் சூளிகையின் வானயிர்த்து
வார்தந் தெழுமதிய மன்னுமே—சீர்தந்த
மாமதலை வான்மதியங் கொம்பு வயிறுதித்த
கோமதலை வாண்மதியங் கொம்பு உ௩-௩௦

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

ஔவையார்

அருளிச்செய்த

# விநாயகர் அகவல்.

---

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலவிசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும் 10.
இரண்டு செவியு மிலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
அற்புதம் நின்ற கற்பகக் களிறே
முப்பழ நுகரும் மூஷிக வாகன
இப்பொழு தென்னை யாட்கொள வேண்டித்
தாயா யெனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்க மறுத்துத்
திருந்திய முதலைந் தெழுத்துந் தெளிவாப்
பொருந்தவே வந்தென் னுளந்தனிற் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில் 20
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்

கோடா யுதத்தாற் கொடுவினை களைந்தே
உவட்டா வுபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் றன்னை யடக்கு முபாயம்
இன்புறு கருணையி னினிதெனக் கருளிக்
கருவிக ளொடுங்குங் கருத்தினை யறிவித்
திருவினை தன்னை யறுத்திருள் கடிந்து
தலமொரு நான்குந் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்க மறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை யடைப்பதுங் காட்டி
ஆறா தாரத் தங்குச நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை யறுத்தே
இடைபிங் கலையி னெழுத்தறி வித்துக்
கடையிற் சுழுமுனைக் கபாலமுங் காட்டி
மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பி னாவி லுணர்த்திக்
குண்டலி யதனிற் கூடிய வசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட வுரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலா லெழுப்புங் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்த னியக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தி னீரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமுஞ் சதுர்முக சூக்கமும்
எண்முக மாக வினிதெனக் கருளிப்
புரியட்ட காயம் புலப்பட வெனக்குத்

தெரியெட்டு நிலையுந் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயிற் காட்டி
இருத்தி முத்தி யினிதெனக் கருளி
என்னை யறிவித் தெனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கு மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே யென்றன் சிந்தை தெளிவித்
திருள்வெளி யிரண்டுக் கொன்றிட மென்ன
அருள்தரு மானந்தத் தழுத்தியென் செவியில்
எல்லை யில்லா ஆனந் தம்மளித் 60
தல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தி னுள்ளே சதாசிவங் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கங் காட்டி
அணுவிற் கணுவாய் அப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமு நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தி னரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தி னிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட 70
வித்தக விநாயக விரைகழல் சரணே.



கணபதி துணை.

# *விநாயக கவசம்.

---

ஆதியில் இக்கவசத்தைக் காசிபமுனிவர் முற்கலமுனிவருக்கு அருளிச்செய்ய, அவர் மாண்டவியமுனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர் மரீசிமுனிவருக்கு உபதேசித்தருள, அவர் பல முனிவர்களுக்குத் திருவாய்மலர்ந்தருளிச் செய்தனரென்றறிக.

நித்திய கருமங்களை முடித்துப் பரிசுத்தமாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு ஒன்றுபட்ட மனமுடனே விநாயகரைத் தியானித்து இதைச் செபிக்கவேண்டும்.

வளர்சிகையைப் பராபரமாய் வயங்குவிநா
யகர்காக்க வாய்ந்த சென்னி
அளவுபடா வதிகசவுந் தரதேக
மதோற்கடர்தா மமர்ந்து காக்க
விளரறநெற் றியையென்றும் விளங்கியகா
சிபர்காக்க புருவந் தம்மைத்
தளர்வின்மகோ தரர்காக்க தடவிழிகள்
பாலசந் திரனார் காக்க. க

கவின்வளரு மதரங்கச முகர்காக்க
தாலங்கணக் கிரீடர் காக்க
நவில்சிபுகங் கிரிசைசுதர் காக்கநனி
வாக்கைவிநா யகர்தாங் காக்க

---

* இக்கவசம் திருவாவடுதுறையாதீனத்துக் கச்சியப்ப சுவாமிகள் அருளிச்செய்த விநாயகபுராணத்திலே மயூரேசர் திருவவதாரப்படலத்தில் உள்ளது.

அவிர்நகைதுன் முகர்காக்க வள்ளெழிற்செஞ்
　　செவிபாச பாணி காக்க
தவிர்தலுறு திளங்கொடிபோல் வளர்மணிநா
　　சியைச்சிந்தி தார்த்தர் காக்க. உ

காமருபூ முகந்தன்னைக் குணேசர்நனி
　　காக்ககளங் கணேசர் காக்க
வாமமுறு மிருதோளும் வயங்குகந்த
　　பூர்வசர்தா மகிழ்ந்து காக்க
ஏமமுறு மணிமுலைவிக் கினவிநு
　　சன்காக்க விதயந் தன்னைத்
தோமகலுங் கணநாதர் காக்கவகட்
　　டினைத்துலங்கே ரம்பர் காக்க. ௩

பக்கமிரண் டையுந்தரா தரர்காக்க
　　பிருட்டத்தைப் பாவ நீக்கும்
விக்கினக ரன்காக்க விளங்கிலிங்கம்
　　வியாளபூ டணர்தாங் காக்க
தக்ககுய்யந் தன்னைவக் கிரதுண்டர்
　　காக்கசக னத்தை யல்லல்
உக்ககண பன்காக்க வூருவைமங்
　　களமூர்த்தி யுவந்து காக்க. ச

தாழ்முழந்தாண் மகாபுத்தி காக்கவிரு
　　பதமேக தந்தர் காக்க
வாழ்கரங்கிப் பிரப்பிரசா தனர்காக்க
　　முன்கையை வணங்கு வார்நோய்
ஆழ்தரச்செய் யாசாபூ ரகர்காக்க
　　விரல்பதும வத்தர் காக்க
கேழ்கிளரு நகங்கள்விநா யகர்காக்க
　　கிழக்கினிற்புத் தீசர் காக்க. ரு

அக்கினியிற் சித்தீசர் காக்கவுமா
புத்திரர்தென் னுசை காக்க
மிக்கநிரு தியிற்கணே சுரர்காக்க
விக்கினவர்த் தனர்மேற் கென்னுந்
திக்கதனிற் காக்கவா யுவிற்கசகன்
னன்காக்க திகழு தீசி
தக்கநிதி பன்காக்க வடகிழக்கி
லீசநந் தனரே காக்க. ௬

ஏகதந்தர் பகன்முழுதுங் காக்கவிர
வினுஞ்சந்தி யிரண்டன் மாட்டு
மோகையின்விக் கினகிருது காக்கவிராக்
கதர்பூத முறுவே தாள
மோகினிபே யிவையாதி யுயிர்த்திறத்தால்
வருந்துயரு முடிவி லாத
வேகமுறு பிணிபலவும் விலக்குபுபா
சாங்குசர்தாம் விரைந்து காக்க. ௭

மதிஞானந் தவந்தான மானமொளி
புகழ்குலம்வண் சரீர முற்றும்
பதிவான தனந்தானி யங்கிரக
மனைவிமைந்தர் பயினட் பாதிக்
கதியாவுங் கலந்துசர்வா யுதர்காக்க
காமர்பவுத் திரர்முன் னுன
விதியாருஞ் சுற்றமெலா மயூரேச
ரெஞ்ஞான்றும் விரும்பிக் காக்க. ௮

வென்றிசீ விதங்கபிலர் காக்ககரி
யாதியெலாம் விகடர் காக்க
என்றிவ்வா றிதுதனைமுக் காலமுமோ
திடினும்பா லிடையூ றென்றும்

ஒன்றுரு முனிவரர்கா ளறிமின்கள்
யாரொருவ ரோதி னாலும்
அன்றவாங் கவர்தேகம் பிணியறவச்
சிரதேக மாகி மன்னும். கூ

விநாயககவச முற்றிற்று.

---

பத்தியுடனே இந்தக் கவசத்தைப் பாராயணஞ் செய்பவர்களுக்குப் பிணியும், வறுமையும், பேய் பூதங்களாலுண்டாகின்ற பல துன்பங்களும், கவலைகளும், பாப முதலியவைகளும் நீங்கும். பெருஞ் செல்வமும், தீர்க்காயுளும், களத்திர புத்திர மித்திராதிகளும் உண்டாகும். யாத்திரையிலே இதைச் செபித்தால், சகல விக்கினமும் போய்ப் பயன்களெல்லாம் கைகூடும். யுத்தத்திலே இதனைச் சொன்னால் சயமுண்டாகும். இருபத்தொருநாள் நாளொன்றுக்கு ஏழுமுறை தோத்திரஞ் செய்தால், மாரண நீங்குவதன்றி உச்சாடணம் ஆகருஷணம் ஸ்தம்பன முதலியவைகள் பயனுறும். இருபத்தொருநாள் நித்தியம் இருபத்தொருதரஞ் செபித்தால், சிறையிருப்பு விடுதலாவதுமன்றி, அரசர்களுடைய நிஷ்டூரமே நீங்கும். அரசனைக் காணப்போகும்போது பத்தியினால் மூன்று தரம் இதை ஓதினால் அவன் வசப்படுவான். இதைப் படித்தாலும், ஒருவர் சொல்லக்கேட்டாலும், பூசித்தாலும், எப்படிப்பட்ட துன்பமும் நீங்கும்.

---

உ

கணபதிதுணை.

திருக்கைலாசபரம்பரைத்

திருவாவடுதுறையாதீனத்துச்

சிவஞானசுவாமிகளருளிச்செய்த

# திருக்கலசைச் செங்கழுநீர்விநாயகர்

# பிள்ளைத்தமிழ்.

---

விநாயகக்கடவுள்.

மணிபூத்த மருமத்து நெடுமான் முதற்புலவர்
வான்பதம் வேட்ட வர்க்கு
வழங்குவோ னுந்தனது பதமிரந் தோர்க்குதவு
வள்ளலுந் தானே யெனுந்
தணிபூத்த தன்றந்தை போற்பிற குறித்ததூஉந்
தற்குறித் தேன்ற தொழிலுந்
தானே கடைக்கூட்ட வல்லசெங் கழுநீர்த்
தடங்களிறை யஞ்ச லிப்பாம்
மணிபூத்த தொய்யிற் கரும்புசிலை யாகவிழி
யம்பினைப் பூட்டி மடவார்
அம்புயக் கிழவனைச் சீதரனை வென்றவர்கள்
அறிவினைத் திறை கோடலும்
பணிபூத்த மலர்மகளி ராங்கதனை மீட்டிடும்
படிவந் திருந்து செவ்வி
பார்க்குந் திருக்கலசை மன்னிவாழ் தன்னையே
பாடுமென் கவி தழையவே. க

ஆசிரியர் கருத்து.

அகளவடி வானபர மானந்த னேனுமெய்
யடியவர்கள் தம்மை யாள
அருளுரு வெடுத்தலா லதனிளமை நோக்கிமுன்
னங்கலார் கூறு மொழியாத்
தகவுபெறு சிறுதேரை யீற்றிற் றழீஇலங்
தாங்குகாப் பாதி பத்துந்
தண்டாத வாஞ்சையிற் கலைசையுற் பலயானை
தன்னையா னின்றேத் தினேன்
இகலுமொரு வேடம் பரித்துவரு மொருவனுமை
யெல்லோரு மொல்லைக் குழீஇ
இயல்பாக வவ்வுருவ முடையவரி னும்பெருமை
யெண்ணிப் பெருஞ் செல்வமும்
மிகவுதவு நீர்மையை மதித்தியல்ப தாத்துதி
விளம்புமத் தாதிய ரினும்
வினையினேன் றன்னிடத் தோவாத பேரருள்
விளைத்திடு மெனக் குறித்தே. உ

---

## காப்புப்பருவம்.

---

திருமால்.

கார்கொண்ட கருநிறக் காளத்தை வெண்டிரைக்
கைகளி னெடுத்து நீட்டுங்
கடும்பிழையை நோக்காது திருவினொடு சுவையமுது
கதிர்மணி தனக் குதவிடும்
பேர்கொண்ட நன்றியே பாராட்டி வெண்கேழ்ப்
பெருங்கடற் பள்ளி கொண்டு
பிறங்குசீர்ப் புவிமிசைப் புருடோத் தமப்பெரும்
பெயர்நிறுவு மண்ணல் காக்க

ஏர்கொண்ட தன்னைத் தளைப்பவரு மூருநரு
மிலரென்ப துலகு தேறக்
கெடுத்தவெம் பாசமோ டங்குசந் தன்கரத்
தேந்திமத தாரை சிதறிப்
பார்கொண்ட வெண்டிசைத் தறுகட் களிற்றுடல்
பனிப்பச் செவிக்கா லெழீஇப்
பகிரண்ட முற்றும் புகுந்துலாய்க் கலைசையிற்
பதியுமோர் களிறு தனையே. க

சிதம்பரேசர். வேறு.

மறம விந்துல கேழினு முயிர்க ளஞ்சவு லாவுபு
வதை செயும்புர நீறுசெய் புன்சிரிப் பாற்கடி
மலர்து வன்றிய வார்குழ லுமையி ளம்பிடி பூதர
மகளு ளஞ்சுக வாழ்வில மிழ்ந்திடத் தேக்கியும்
மதுக ரங்குண மாய்வளை சிலைகொ ணர்ந்தம ராடிய
மதனை வென்றருள் சீர்நய னந்தனிற் பார்குரு
மதியொ டுங்கதிர் வானவ னெளியி றந்தமை யாலயர்
மகித லங்களி கூர்தர வின்பினைக் கூட்டியும்
வெறிக மழ்ந்தறு காலுண மதுவுமிழ்ந்தலர் தாமரை
மிசைவ திந்தவ னோர்முடி விண்டகைப் பூத்தனில்
விரிக ருங்கட லூடெழு கொடிய வெங்கடு வானனி
வெருவு மும்பர்மு னேயப யந்தனைக் காட்டியும்
விறல்பி றங்குக டாமிசை யெதிரு மந்தக னூர்தமை
மெலிவு கொண்டுயிர் வீடவு தைந்தபொற் றூட்டுணை
வினையி னென்றலை மேலருள் செயவி ரங்கியு மேர்மரு
வியசி தம்பர ரூபனை யன்புறப் போற்றுதும்
அறலொ ழுங்குத ணுதிட முழுவ துஞ்செறி நீள்கரை
யகல்வி சும்பென நீடுத ரங்கமிக் கார்த்தெறி
அவிர்செ ழுங்கதிர் மாமணி பரவி யெங்கணு மேவுவ
ததனி லொன்றிய மீனவி னந்தனக் கேற்றிட

வயல்வ ழிந்திடு மாறுத னகநி ரம்பிய வாலொளி
யணவு தண்புனல் வாவிகு ளிர்ந்திருட் கூட்டம்
தழிய மென்கதிர் வீசிய வெளிய வம்புலி போலுற
வருகு வந்துத ணீரைமு கந்தெடுத் தாற்றல்செய்
துறையு மங்கைய ராடவ ரதுவ ழுங்கிடு மாரமு
துணும ரம்பையர் வானவர் தங்களிற் றேற்றவிண்
ணுலகெ னும்புகழ் மீறிய கலைசை யம்பதி யேதன
துறையு ளென்றுநி லாவிவ ணங்கிநிற் போர்க்கருள்
உதவு மெம்பெரு மானையெவ் வுயிர்க ளுங்கொடு மாமலம்
ஒருவி யன்புரு வாகிய டங்கவைத் தாட்கொளும்
உகள பங்கய பாதனை யுலக மெங்கணு மாயனை
யுடைய செங்கழு நீர்மத தந்தியைக் காக்கவே. உ

சிவகாமியம்மை. வேறு.

கரும்பு குழையச் சுரும்பொலிப்பக்
கடிப்போ துகுத்த மதனையெம்மான்
கண்டு மிகையா மெனக்கருதிக்
கனலிக் கூட்டு மாற்றலும்பின்
விரும்பு முயிர்கட் கிருங்காம
விளைவும் பிரச மலர்க்கணையும்
வில்லுந் தரித்த திருக்கரத்தால்
விளைத்த சிவகா மியைப்பணிவாம்
அரும்பும் வெகுளிக் கயஞ்சாடி
யவனி நடுங்க வுடன்மடங்கல்
ஆண்மை யடக்கி யெதிரேறு
மடல்வெம் புலிப்போத் துயிர்செகுத்து
வரும்போர்ச் சரபத் துளங்குழைய
மார்பும் புயமுந் துவைத்தாடி
மகிழ்கூர் கலைசைச் செங்கழுநீர்
மழமா களிற்றைப் புரக்கவே. ௩

சுப்பிரமணியக்கடவுள். வேறு.

உரவோர்க் குருவினின் மிகச்சிறிய ரேனுமவ்
வுரனிலாப் பெரியர் தம்மை
யுடைந்தழிய வென்றுவிறல் வாகைசூ டுவரெனும்
உரைக்கிலக் கியமா கவே
விரவாது விண்ணம் பொதிந்துய ரடுக்கலின்
வீறழித் தாண்மை கொண்ட
வெற்றிச் சிறுப்படைச் செய்யவேல் கைவைத்த
வீரனுக் கன்பு செய்வாம்
புரவாக வைம்பொறியும் வைத்திட் டவற்றுளோர்
பொறியுடைய வேக தேசம்
பூண்டமற் றவயவங் கட்குமே லாந்தலைமை
பொலிதலாற் பத்தி செய்வோர்க்
கிரவோட்டு தன்குறிப் பெயரையே முழுதிற்கு
மேற்பித்த திருமு கத்தின்
எழில்வாய்ந்து தென்கலைசை மேவுசெங் கழுநீ
ரிருங்களிற் றைக்காக்கவே. சு

வைரவக்கடவுள், பிரமதேவர், தேவேந்திரன்,
இலக்குமி, கலைமகள், துர்க்கை, சத்தமாதர்,
முப்பத்துமுக்கோடி தேவர். வேறு.

அலைத்தலை குலைக்கண மிடித்தெழு
செழும்புன லாலும் பெருக்கமு
மனக்குழு வளக்கயல் பிடித்துண
நினைந்துற வாடும் செறுக்களும்
மலர்ச்சிசெய் மலர்த்தலை மிதித்துளர்
சுரும்பிசை யாயுந் தருக்களும்
அடற்கரி பரித்திரள் தருக்கியும்
அருங்கலி யாருந் தெருக்களும்

நிலக்குல மகட்கணி முடிக்கிணை
　　பொருந்திய தேரின் பிறக்கமும்
நெருக்கிய மறப்பகை முருக்கிய
　　பெரும்புகழ் மேவந்த நொச்சியும்
நிரப்பினர் பசிப்பிணி யறக்கெட
　　வழங்கற நீடுந் தொடர்ச்சியும்
நிலைத்த கலைசைப்பதி நகர்க்குளொரு
　　செங்கழு நீரைங் கரத்தனை

மலர்ப்பத மெடுத்தவ ரியைப்பட
　　வகிர்ந்துரி மூடும் புயத்தனும்
வரிச்சிறை யளிக்குல முழக்கவிதழ்
　　விண்டுகள் வாரம் புயத்தனும்
மதத்துநிழ லைத்தனி சுழித்தெதிர்
　　கொடும்பகை மாய்வெண் கயத்தனும்
மணிக்குவை திரைக்குமலை யிற்றுயின்
　　முகுந்தன வாவுங் குயத்தியும்

உலப்பறு கலைத்திற மனைத்துமுத
　　வுஞ்சுதை யூர்பங் கயத்தியும்
உருத்திடி யெனக்குர லூரப்புமகி
　　டன்றிற லோவுஞ் சயத்தியும்
உருக்கிளர் முருக்கித ழுருக்குமத
　　ரம்பெறு மேழ்பெண் குலத்தரும்
உருத்திரர் மருத்துவர் வசுக்கதிர்
　　எனும்புல வோரும் புரக்கவே. ௫

காப்புப்பருவம் முற்றிற்று.

———

# செங்கீரைப்பருவம்.

---

அண்டர்பணி மூவரான சூயைபா லெய்திமழ
வானது நிகர்ப்ப வெய்யோற்
கல்லாது தனதுநல மீயாத தாமரை
யணங்கிடை விரும்பி யேகித்
தண்டவள வெண்முழு மதிக்கடவுள் குழவியாய்த்
தடைபட்டு நின்ற தேய்க்குந்
தனிமுகச் சிறுகோட்டி னணிகிம் புரிக்கவின்
றன்னைக் குறித்து நோக்கும்
மண்டிய விருப்பின தொருப்பாடு தண்டாது
வளர்தலால் விழிகள் சாய்த்து
மாறிமா றித்தெரித் திடுகின்ற தேய்ப்பவொளிர்
மதிமுக மசைந்தா டுறத்
திண்டிறல் படைத்தசெங் கழுநீர் மதக்களிறு
செங்கீரை யாடி யருளே
திருந்துமடி யார்க்கருள் புரிந்தகலை சைப்பிரான்
செங்கீரை யாடி யருளே. க

கந்தமலி பங்கயத் திருமுக மசைத்தொறுஉங்
கார்க்குஞ்சி மீது கவினக் [ய்க்
கால்யாத்த வெண்மலர்த் தொங்கல்பின் னுன்றுலா
கன்னத் தளாவி வாசந்
தந்தமத நீரிற் படிந்துகரு நிறமாய்த்
தணந்துழிப் பற்று மந்நீர்
தனையுதறி முன்னைத் தனதுநிற மெய்தித்
தரங்கந் துரங்க நிரையிற்

கொந்தல ருகும்புன்னை மீமிசைத் தாவிக்
குதிக்குமணி யாழி யகடு
குழியக் குறைத்துக் கறுத்துமழை தூஉய்வெண்மை
கொண்டுவளர் கொண்ட லேய்ப்பச்
சிந்தூர முகத்தசெங் கழுநீ ரிளங்களிறு
செங்கீரை யாடி யருளே
திருந்துமடி யார்க்கருள் புரிந்தகலை சைப்பிரான்
செங்கீரை யாடி யருளே. உ

வேறு.

கொங்கலர் நின்னடி சென்னியில் வைத்துக்
கூப்பிய கையொடுநின்
குளிருள மகிழ்தரு தொழில்புரி தாதியர்
கொள்கையி னிரைநிரையாய்த்
தங்கிய பங்கய மங்கையர் முதலிய
தமனிய வுலகுறையுந்
தையலர் மருமத் தொய்யில் பரித்த
தனக்கரி யுலவைகளுள்
திங்களி னொளிர்தன துலவை நிகர்ப்பன
தேர்தர வெதிர்நோக்கித்
திரிவது போலிரு புறமு மலர்ந்தவிர்
திருமுக மினிதசைய
அங்குச மேந்திய செங்கழு நீர்க்களி
றுடுக செங்கீரை
அணிகிளர் கலைசைந கர்க்கு ளிருந்தவ
னுடுக செங்கீரை. ௩

சுரும்பு முரன்றலர் கொன்றை செறித்த
துலங்கொளி வார்சடிலத்
தோன்றலை யெய்தி யணைத்திடு காலைத்
தோளொடு மருமமெலாம்

இரும்பு ணுறும்படி யுழுதரு தகைமை
யிரண்டற் குஞ்சமமாய்
இயைவது நோக்கி மகிழ்ந்தவை தம்மு
ளிணங்கச் செய்வதென
விரும்பி யமைத்து மடப்பிடி கோட்டொடு
வில்லுமிழ் தன்னுலவை
மேவிட வைத்துக் கொங்கைத் தீம்பய
மென்மெல வுண்டுமணம்
அரும்பிய செவ்வாய்ச் செங்கழு நீர்க்களி
ருடுக செங்கீரை
அணிகிளர் கலைசைந கர்க்கு ளிருந்தவ
ளுடுக செங்கீரை. ச

வேறு.

பொங்கொளி வீசு பொலங்குழை காது
புகுந்தேர் கொண்டாடப்
பொன்றிகழ் தோளணி தொங்கலி னேடு
புலம்பா நின்றாடத்
துங்க நிலாவு தடங்கையி னீர்சுல
வுங்கார் வென்றாடத்
துன்றிய தேமலி குஞ்சியி னேடு
தொகுந்தார் விண்டாடப்
பங்கய ளுதியர் வந்து தவாத
பதந்தா வென்றாடப்
பண்பறு நேரலர் நெஞ்சழல் வாயுறு
பஞ்சாய் நைந்தாடச்
செங்கழு நீர்மத தந்திவி நாயக
செங்கோ செங்கீரை
தென்கலை சாபுரி தங்கிய நாயக
செங்கோ செங்கீரை. ரு

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

## தாலப்பருவம்.

புதிய வாசந் தனைப்பரப்பிப்
புறத்தே யெங்குந் திரிந்தயரும்
பொறிவண் டினங்கள் தமையழைத்தம்
புயத்தே னூட்டிப் பகலோம்பி
முதிய நிசிவந் திடும்போது
முகைவிண் டலர்ந்த நறுங்குமுத
மூரிச் செழுந்தேன் முகந்தூட்டி
முழுதுங் காத்துக் கடல்வரைப்பின்
வதியு மிரவோர் தமைக்கீர்த்தி
மகளாந் தூதின் வரக்கூவி
மகிழ்ந்தெப் போது மெவ்வாறும்
வழங்கிக் காக்கும் பெருங்கொடையோர்
கதிய தடஞ்சூழ் திருக்கலைசைக்
களிறே தாலோ தாலேலோ
கருணை முதிர்ந்த செங்கழுநீர்
கன்றே தாலோ தாலேலோ. க

தொடுக்குந் தெரியற் கருங்கூந்தற்
றோகை யனையார் துடுமெனநீர்த்
துறையுட் பாய்ந்து விளையாடத்
துண்ணென் றெழுந்து மேற்சென்று
தடுக்கும் பசுங்கோட் டலர்கனிகாய்
சாடித் தனது வயிறுருவத்
தாக்கு நெடுவா ளையுமதனைத்
தன்னுட் பிணிக்குந் தேனடையு

மடுக்கும் பரிதி நுழைந்துதின
மலேக்கும் பகைமை மீக்கொண்டங்
கடர்த்துப் பறித்த வவன்றிருத்தே
ரச்சு மதுகோத் திடுமுருளுங்
கடுக்கும் பொழில்சூழ் திருக்கலேசைக்
களிறே தாலோ தாலேலோ
கருணேமுதிர்ந்த செங்கழுநீர்க் கன்றே
தாலோ தாலேலோ. உ

வேறு.

வேய்மரு டோளியர் குஞ்சி திருத்தி
மிலேச்சிய செம்மணியின்
விற்பயில் கொண்டைவெய் யோனென வாங்கி
யுடைத்திரு கூறுசெய்தே
தேய்மதி கொண்டபி ரான்சடை மேலெழில்
செய்கென வோர்பிளவைச்
சேர்த்துப் பின்னெரு பிளவுமை யாண்முடி
செருகிச் சமமாகத்
தூய்மதி யென்றிறை மார்பணி கொம்பைத்
தொடையி லறுத்துடனத்
தோகை முடிக்க ணிசைத்து மகிழ்ச்சி
துளும்பித் தந்தையொடுந்
தாய்மகிழ் கூர நடித்தருள் செல்வா
தாலோ தாலேலோ
தகைபெறு செங்கழு நீர்மத வேழந்
தாலோ தாலேலோ. ௩

வெண்டலேயேந்தியவேணிமுடிப்பான்மெய்யினும்வெம்பனிசூழ்
வெற்பன் மடக்கொடி மெய்யினு மேறி மிதித்தா டுந்தோறும்
வண்டலே யக்கடி வீசு கவுட்புறம் வாக்கும தப்புனலும்
வார்தரு தடவுக் கைத்துளே யுமிழு மதப்புனலுஞ்சிரமேற்

கொண்டலை நிகரக்கொட்டுவ திருமுது குரவர்தமக்குமணங்
குலவிய யமுனையுமந்தாகினியுங்கொடுவந்தாட்டல்பொருந்
தண்டலை சூழ்கலை சைச்சிறு களபந் தாலோ தாலேலோ
தகைபெறு செங்கழு நீர்மத வேழந் தாலோ தாலேலோ.

வேறு.

மலைம டந்தையருள் பாலா தாலோ தாலேலோ
மதமி குந்திழிக போலா தாலோ தாலேலோ
அலகி லன்பர்பணி காலா தாலோ தாலேலோ
அருள்சு ரந்திடும்வி சாலா தாலோ தாலேலோ
விலகு கின்றபணி மார்பா தாலோ தாலேலோ
இனிய மந்திரசொ ரூபா தாலோ தாலேலோ
பொலிபெ ருங்கருணை யாளா தாலோ தாலேலோ
புகழ்பெ றுங்கலைசை வாணா தாலோ தாலேலோ. ரு

தாலப்பருவம் முற்றிற்று.

---

## சப்பாணிப்பருவம்.

---

பக்குவ முதிர்ந்துசிவ புண்ணிய நிரம்பிமல
பாகம் பிறந்து சத்தி
பதிந்துவினை யொப்புப் பழுத்தவர்கள் பந்தநோய்
பாற்றுமொரு செங்கை மலரும்
அக்கருணை யடியவர்க ளுயிருடன் பொருள்காய
மாமெவ் வகைப்பந் தமும்
அங்கி கரிக்குமோர் கைம்மலரு மாறுபா
டாதரித் திடுசெய் கையான்
மிக்குறும் பகைமைமேன் மேலெய்தி யாங்கது
விலக்கத் தமக்கு யர்ந்தோர்
மேதினிக் கின்மையாற் போராட் டியற்கையின்
மெலியாம லொன்றை யொன்று

தக்கவகை தாக்குதல் கடுப்பக் கவின்செயவொர்
சப்பாணி கொட்டி யருளே
தங்குகலை சைப்பதிச் செங்குவளை நாயகன்
சப்பாணி கொட்டி யருளே. க

வயங்குமுழு மதியத் திருஞ்சுவைப் புத்தமுது
வாய்மடுத் துண்ண வெண்ணி
வருகின்ற தகுவர்குல மொப்பக் கலித்தலை
மடிக்குந் திரைப்பு னற்பூங்
கயங்கிளர் செழுங்கமல வாண்முகத் தூற்றெழூஉங்
கலுழிக் கடாம டுப்பக்
கருதிவரு மெல்லிசைத் தும்பியும் வண்டுங்
கரங்குமிஞி றுஞ்சு ரும்பும்
பயங்கதுவ மொய்த்தவை விரைந்தோட வோச்சுறூ
பண்புபொர வேற்போர்க்கு வான் [உம்
பரிசிலை யளித்தளித் துச்சிவந் தாங்கொளி
பரப்பிமணி யாழி பூண்டு
தயங்குமிரு கைகளா லெழில்பூப்ப மதகளிறு
சப்பாணி கொட்டி யருளே
தங்குகலை சைப்பதிச் செங்குவளை நாயகன்
சப்பாணி கொட்டி யருளே. உ

வேறு

மும்மல மாமத முற்றுப் போத
முழுத்தறி யறவீசி
முகிழ்த்தல ரன்பின் சங்கிலி யுதறி
முதிர்ந்த வருட்கூடத்
திம்மென நீங்கி வெளிக்கொடு புவன
மெனுங்கடு வனமோடி
எப்பா கர்க்கு மடங்கல வாகி
யியங்கு முயிர்க்கரிகள்

தம்மைவி டாது தொடர்ந்து பிணிப்பத்
தகுமங் குசபாசந்
தாங்குதல் கண்டுந் தம்போ லெண்ணிச்
சார்பவை தமைநகையாக்
கொம்மை மலர்க்கைகள் கொட்டுவ தேய்ப்பக்
கொட்டுக சப்பாணி
குலைகெழு தடநிறை கலைசை நகர்க்கிறை
கொட்டுக சப்பாணி. ௫

மட்டுமிழ் கொன்றை மிலைச்சுபொ லன்சடை
வள்ளலு நள்ளிருள்கூர்
வண்டுளர் குழலுமை யாளுங் கைதொடும்
வள்ளத் தறுசுவையுந்
தொட்டு வளாவி யளைந்தவர் மிசைமுடி
தொட்டடி மட்டுமுறத்
தூவி விடுத்தணி வீதி புகுந்து
தொடர்ந்து சிறூர்குழுமி
இட்டு நிறைத்திடு புழுதிக் குவைகளை
யெற்றி யுழக்கியவீ
இயைந்திடு மப்புழு தித்துகள் போம்படி
யெண்ணிக் கைகளினைக்
கொட்டுவ தெனவெழில் கொட்டிட வோர்முறை
கொட்டுக சப்பாணி
குலைகெழு தடநிறை கலைசை நகர்க்கிறை
கொட்டுக சப்பாணி. ௬

வேறு

விரிதிரை பொங்கி யுலாவு மளக்கர் மணிப்பாயன்
மிசைவிட முந்தும ராவணை யிற்றுயில் புத்தேளும்
மருமல ரம்புய மேவுமி ருக்கை மறைக்கோவும்
மதமழை சிந்துவெ ளானை யெருத்தனு மற்றோரும்

அருள்தரு கென்றுப ராவி நினைத்தது செப்பாமுன்
னவரவர் சிந்தையி னுர்வன முற்றும ளித்தோகை
கருதிடு செங்கழு நீரிறை கொட்டுக சப்பாணி
கலைசை புரந்தருள் காரண கொட்டுக சப்பாணி. ரு

சப்பாணிப்பருவம் முற்றிற்று.

---

## முத்தப்பருவம்

---

அதிருந் தரங்க முரசறைய
வளிபண் பாடத் துள்ளுவரால்
அனைத்தும் வெடிபோய்த் தாவிமறிந்
தாடிக் குதிக்கச் சங்கினங்கள்
பிதிருந் தாளம் பரிசிலெனப்
பேணிச் சொரியும் புனற்றடஞ்சூழ்
பெருநீர்க் கலைசைச் செங்கழுநீர்ப்
பிள்ளா யல்குன் மணிப்பாம்புங்
கதிரும் பசும்பொற் றனக்கோடுங்
காயத் துடையே நீயணியுங்
கலனும் பணிக்குங் கோட்டினுக்குங்
கடுத்து வெருவே மனுகவந்து
முதிருஞ் சிவப்பூர் செழுங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முழுது முணர்ந்த பரபோக
முதல்வா முத்தந் தருகவே. க

கொத்து நிரைத்த மலர்ச்சோலைக்
குயில்கூஉங் கலைசைச் செங்கழுநீர்க்
குழகா வம்மை யுனையீன்ற
கோமான் றனக்குப் பணிநிலைக்க

வைத்து நிரைத்த பலவண்ட
வகுப்பும் வெள்ளிற் கனியெனநீ
மதித்துக் கவளங் கொளக்கரத்தால்
வளையே லெந்தாய் தளவமலர்
ஒத்து நிரைத்த நகையாடி
யுன்னோ டுரிமை பாராட்டும்
ஓகை மடவா ரெனயாமு
முலவா வின்பக் கடன்மூழ்க
முத்து நிரைத்த கனிவாயான்
முத்தந் தருக முத்தமே
முழுது முணர்ந்த பரபோக
முதல்வா முத்தந் தருகவே. ௨.

வேறு

துளிதூங்கு தேந்தொடை மிலைச்சிய கருங்கூந்தல்
சுவன்மிசைப் புரள நின்று
தொடித்தோள் பெயர்த்தர மடந்தையர்க ளிருபுறந்
தூமணிக் கவரி வீசத்
தெளிதூங்கு நவமணி குயிற்றியணி வாலுளைச்
சிங்கஞ் சுமந்த தவிசிற்
செங்கோ னடாத்துமிறை வைப்புமுத லெங்கணுஞ்
செல்லப் பரந்து விரியும்
அளிதூங்கு மெமதுளப் பங்கயங் குவியவது
வல்காமை நிற்கு மளவும்
அவிரொளி பெருதவெம் முகமதியு மாவிப்ப
அமிழ்தம் பொழிந்தா லெனக்
களிதூங்கு நகைநிலவு சிறிதே யரும்புநின்
கனிவாயின் முத்த மருளே
கலைசைநகர் வந்தசெங் கழுநீர் மதக்களிறு
கனிவாயின் முத்த மருளே. ௩.

திரைபூத் தொடுங்குவ தெனப்படி யளிக்குலஞ்
சிறைபுடை பெயர்த்தொ டுக்கித்
தீஞ்சுவை மடுத்துண்டு களிதரப் பூங்கவு
டிறந்தூற் றிருந்து வட்டும்
விரைபூத்த கடமுங் கொலைத்தொழில் பழுத்தொழுகும்
வெய்யகூர்ங் கோடு மெங்கண்
மென்மலர் முகத்திற் பெருங்கறையு மூறும்
விளைத்திடின் விளக்க வெங்கண்
மரைபூத்த கண்ணிமைக் குள்ளெழுது மையும்
வயங்குமுக் கணியு மையன்
வதனத் திருங்கறையு மூறுஞ்செ யாவன்பு
வாய்ப்பப் பவக் கடற்கோர்
கரைபூத்த செம்மொழிப் பழமறை முளைத்தநின்
கனிவாயின் முத்த மருளே
கலைசைநகர் வந்தசெங் கழுநீர் மதக்களிறு
கனிவாயின் முத்த மருளே. ௪

வேறு

மறைநெறி யொழுகுநர் தங்களை யாள
மதித்த மறைப்பொருளே
வளிவெளி சலநில மங்கியெ லாமுரு
வத்து நிறுத்தவனே
நிறைவளை மகளிர் நலம்படர் வோர்தம்
நினைப்பி லொளித்தவனே
நிருமல வறிவினர் சிந்தை நிலாவிய
நிர்க்குண வற்புதனே
அறைகட லுலகொடு பங்கயன் மாலை
யளித்து வளர்த்தவனே
அவரவர் பெறவுறு பந்தமும் வீடும்
அமைத்த அறக்கடலே

முறைவளர் கலைசைகொள் செங்கழு நீரிறை
முத்தம ளித்தருளே
முனிவர்க ளமரர்கள் வந்தடி தாழ்பவ
முத்தம ளித்தருளே. ௫

முத்தப்பருவம் முற்றிற்று.

---

## வருகைப்பருவம்.

---

சுத்தவொளி யாகியறி வாகிமல மாயைத்
தொடக்கிற் படாத நிறைவாய்த்
தொல்லுலக மெங்கணுங் கரைபுரண் டலையெறி
சுகாதீத வாரியி லெமை
வைத்தருள வெம்போ லெடுத்தநின் திருமேனி
மழமையைக் கண்டினமென
மதித்தளவ ளாவிவிளை யாடக் குறித்தோடி
வருமிள மகார்கள் குழுமி
மொய்த்தவழி நீதவழ்ந் தெதிர்வரவு காண்டலு
முழுக்களிறி தென்ன வெருவி
மொய்யொளிக் கண்களைக் கையாற் புதைத்தலறி
முன்விரைந் தோட முளரிக்
கைத்தலத் தங்குசம் பாசந் தரித்தசெங்
கழுநீர்ப் பிரான் வருகவே
கண்கதுவு மெழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசை நாயகன் வருகவே. க

அலங்கொளி ததும்பிக் கொழுந்துவிடு நித்திலம்
அலைத்துக் கொழிக்கு மலையால்
ஆற்றல்புரி தன்கரை கரைத்துத் தமக்குறுதி
யாக்குநர்த மூக்க மாய்க்கும்

விலங்கனைய புல்லியர் பொரூஉம்புனற் பூந்தடம்
விலங்கா மலங்கு மீன்போல்
விழையுநின் முன்புறங் காண்டோறு மூற்றிய
விலாழிக் கடாங்கொள் களபக்
குலங்கவளை திர் கொண்டோகை கூர்ந்திடப் பின்புறக்
கோமளங் காணுந் தொறுங்
குழமைச் சிறுருங் குழீஇத்தொடர்ந் துன்போற்
குலாவிவர வெம்மு ளத்துக்
கலங்குமரு ளீர்ந்திட் டிலங்குமருள் காட்டுசெங்
கழுநீர்ப் பிரான் வருகவே
கண்கதுவு மெழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசை நாயகன் வருகவே. உ

மண்டலத் துண்டுடுத் திளநகை மடந்தையர்
வடந்தழுவு கொங்கை தோயும்
மருளன்றி யருளிலாப் பூரியரு மாரியரும்
வாக்குமன மெட்டாத நீ
கொண்டநற் றிருமேனி யுண்மையைத் தத்தங்
குறிப்பினுக் கேற்ப மொழியுங்
கொள்கைபோற் சேயிடையி னின்வரவு கண்டுசிலர்
கூடும் பொதுக் காட்சியால்
வெண்டரள நீள்கோட் டுவாவென் றுளங்கொள்ள
வேறுசில ருற்று நோக்கி
வேழமன் றீங்கிது தவழ்ந்துவிளை யாடுநம்
விநாயகன் கோலமென்னக்
கண்டனர் மொழிந்துளத் தள்ளூற வெங்கள்செங்
கழுநீர்ப் பிரான் வருகவே
கண்கதுவு மெழில்கொண்டு விண்கதுவு மாளிகைக்
கலைசை நாயகன் வருகவே. ௩

வேறு.

இருகை யூன்றித் தவழ்ந்துமழ
வேற்றின் வருந்தோ ளுங்காங்கே
எறுழ்வன் புழைக்கை நெட்டுயிர்ப்பா
னிருமா நிலத்தைக் குழிப்பதுவும்
பெருகுங் கடைக்காற் செயுஞ்செவிவான்
பிளப்ப தேய்ப்பப் பல்காலும்
பெயர்ந்து மடங்கி யசைந்தாடும்
பீடுந் தத்தம் பொறிதமக்கு
மருவும் புலனை யவற்றிடமா
மண்ணை யகழ்ந்தும் வெளிப்பரப்பை
வளைத்துங் கவவிக் கொடுத்துதவும்
வண்மை காட்ட வசைந்தசைந்து
முருகு விரியுந் தொடைப்புயத்து
முதல்வா வருக வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர்
முனியே வருக வருகவே. ௪

உருகு மடியா ரள்ளூற
வுள்ளே யூறுந் தேன்வருக
வுண்ணத் தெவிட்டாச் சிவாநந்த
வொளியே வருக புலன்வழிபோய்த்
திருகு முளத்தார் நினைவினுக்குஞ்
சேயாய் வருக வெமையாண்ட
செல்வா வருக வுமையீன்ற
சிறுவா வருக விணைவிழியாற்
பருகு மமுதே வருகவுயிர்ப்
பைங்கூழ் தழைக்கக் கருணைமழை
பரப்பு முகிலே வருகநறும்
பாகே வருக வரைகிழித்த

முருக வேட்கு முன்னுதித்த
முதல்வா வருக வருகவே
மூரிக் கலைசைச் செங்கழுநீர்
முனியே வருக வருகவே.

வருகைப்பருவம் முற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.

---

தண்டரள மேந்தித் தயங்குநீள் கோட்டைத்
தழீஇச்சித் திரம்பெற்ற வான்
தனியுவாத் தாவந்து மல்குநா கத்தார்கள்
தண்டாது சூழ்ந்து மகிழ்வு
கொண்டிட விலங்குதொட் டிக்கலையி னளியமிழ்து
கொட்டியெமை யாளு முக்கண்
குழகன் படைத்தபெரு வையஞ் சுமந்தாற்று
கொள்கையி னுருக்கொண் டெதிர்
கண்டவர் வியப்புறும் படியருண மணியுருக்
கவினுரு மொளிவீ சிடுங்
காட்சியா னின்னையிவ னொத்துளா னீயுமிக்
கடவுளை நிகர்த்து ளாய்காண்
அண்டரும் பழமறையு மோலமிட நின்றவனொ
டம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ யாட வாவே. க

ஒளிவந்த நீயுடற் கூறுபடு வெம்பாந்த
ளொன்றனுக் கஞ்சி யஞ்சி
உழிதந்து திரிவையிவ னண்டபகி ரண்டமு
மொருங்கஞ்ச வெய்துயிர்க்குந்

துளிவந்த காரிபடு துளைவெள் ளெயிற்றுவாய்த்
துத்திப் படக்கோ ளராத்
தொகையெலா மெய்யினுங் கையினுங் கலனெனச்
சூழ்ந்துகொண் டான்வெண்மை கூர்ந்
திளிவந்து தேயுங் களங்கவுரு வுடையைநீ
யிவன்செம்மை வாய்ந்து தேயா
தென்றுமக ளங்கவுரு வுடையனு கலினிவனே
யெவ்வாறு மொப்பா யலே
அளிவந்து நின்னையு மழைத்தனன் காண்விரைந்
தம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ யாட வாவே. ௨

கரும்பினை நெருக்கிநெரி செய்ததன் றேறலைக்
காற்றுநெட் டாலை யேய்க்குங்
கயமுகன் கையகப் பட்டுநல நீங்குசுரர்
களைகணுய்த் தோன்றி யவனைத்
துரும்புபட வென்றழித் தவ்வமர ரோடுநின்
றுயருந் தவிர்த் தளித்த
சூழ்கருணை நீயறிவை யன்றியும் யாருந்
தொடங்குதொழி லினிது முற்ற
இரும்புவியி லூறுதீர்த் தருள்பவனு மிவனலா
லில்லையிவ னிசையை யின்னும்
இயம்பிடி னுலப்புறு தீங்குநீ வரினுன்பி
னெய்திடும் பாம்பு மணியும்
அரும்பணிக ளொடும்வைத்து மீண்டுதொட ராதுசெயும்
அம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறொ
டம்புலீ யாட வாவே. ௩

தெருளாத தக்கனுர் வேள்வியை யழித்தும்பர்
சென்னியை யுருட்டி நினையுந்
தேய்த்தசய வீரனு மிவன்றம்பி யென்பதுந்
திருமார்ப னவம திப்ப
உருளாழி கைக்கொண்டு மற்றவ னிரந்தாங்
குளுற்றும்பிக டக்கூத் தினுக்
குள்ளம் பெருங்கருணை பூத்தபின் னுங்கதனை
யுதவினு னிவனென் பதும்
வெருளாது சீறிய வரக்கனைப் பந்தாடி
விட்டதுங் கேட்டி லாய்போல்
வேண்டிநா மேவலி னழைத்திடவு மதியாது
விண்ணூறு சேறி கண்டாய்
அருளா திவன்கடியில் வேறுபுக லேதுனக்
கம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறு
டம்புலீ யாட வாவே. ச

வையகம் போற்றுமெம் மானிவனை நீயவ
மதித்துவெஞ் சாப மெய்தி
வசையிடைப் பட்டனைமு னின்றுமவ மதிசெய்து
வாராம லொழியி னங்கண்
எய்தியொரு தண்டமும் புரியவேண் டாதிவ
ணிருந்தாங் கிருந்து நீள்கை
எடுத்துவிண் ணூறநிமிர்த் தொருதுருவ னூர்பிணித்
திடுஞ்சூத் திரத்தி னின்று
மொய்யென வறுத்துனைப் பற்றிப் படுப்பனிவ
னுடல்பூண்ட பாம்பி னத்துள்
ஒன்றறியி னண்ணூந்து தாவியுனை யுண்டுபின்
னுமிழாது விடினும் விடுமால்

ஐயமிலை யாகலான் மற்றிவன் வெகுளுமுன்
அம்புலீ யாட வாவே
அருட்குண நிரம்புசெங் கழுநீர் மதக்களிறெ
டம்புலீ யாட வாவே. ரு

அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

## சிற்றிற்பருவம்.

---

கூன்பாய் வடிவச் சிலைநுதலுங்
குவவுத் தனமும் வாய்த்தமலைக்
குமாரி யுளமும் விழியுமகிழ்
கூரக் குறும்பு விளையாடி
வான்பாய் கருணை பூத்திங்கும்
வந்தா யெந்தாய் சிறுவீடு
வகுக்குந் தொடக்கத் துணைப்போற்ற
மறந்தேஞ் சிறியே மதனுனீ
தான்பாய் வெகுளி மீக்கொண்டுன்
தன்மை காட்ட லடாதுனக்கித்
தாழ்வு தீரச் சிறுசோறு
தருவே முன்னர் வாவிதொறுந்
தேன்பாய் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. க

விருந்து விளிப்போ மெனக்கருதும்
வேலை யடிகே ளிவணீயே
விரும்பி வந்தா யெனமகிழ்ச்சி
மீக்கூர் தலினுற் செவ்வாயின்

முருந்து தோன்ற முறுவலித்தே
மல்லா லொருநின் கரிமுகம்போன்
முகமும் பூதப் பெருவயிறு
முடங்குங் குறட்டா ணருநடையும்
இருந்தவாறு நோக்கி நகைத்
திட்டே மல்லே மிடந்தோறும்
இருக்கு முழக்குந் தேவாரத்
திசையுந் துவன்றி யோங்கவளங்
திருந்துங் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. ௨

தவளம் பழுத்த கூனலிளஞ்
சசிநே ருனது கோட்டினொடு
தடந்தாழ் புழைக்கைக் கெதிராகத்
தனத்தோ டுரோமாவலி தாங்கும்
பவளம் பழுத்த சேயிதழார்
பயிலு மனைகளன்றி யொன்றும்
பற்றாச் சிறியேஞ் சிறுவீடுன்
பதத்துக் கிலக்கோ பசுபோதக்
கவளந் தெவிட்டு மதகளிறே
கண்ணின் மணியே நான்மறையுங்
கதறித் திரிந்துங் கண்டறியாக்
கதியே துறைகடொறுந்தாளந்
திவளுங் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. ௩

னென்னற் பொழுது விருந்தாக
நின்னை விளிப்பேங் கடக்களுழி
நீத்தஞ் சிற்றி லழிக்குமெனு
நினைவால் விடுத்தே நான்மறையும்
உன்னற் கரிய பரம்பொருளே
யுண்மை யிதுவா மவமதியா
லுன்னை யுழையா திருந்தேமென்
றுள்ளங் கலுவிச் சிறியேமை
இன்னற் படுப்பக் குறும்புபல
வியற்று நின்றாய் நின்பெருமைக்
கேலா தடிகேள் பெருங்கருணைக்
கெல்லா யெளியேந் தவப்பேறே
தென்னற் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. ௪

பெருத்த வயிறு தயங்கமெல்லப்
பெயர்ந்து நடந்து குடங்கைமிசைப்
பெரும்பண் ணியமு மேந்தியெம்பாற்
பேணி வருநின் வரவினைக்கண்
டருத்தி யொடுநீ யுண்டபரி
கலசே டத்தை யடியேங்கட்
களிக்க வருவா யென்றுவகை
யரும்பி வழிபார்த் திருந்தேமை
வருத்த லழகோ விக்கினஞ்செய்
மன்ன னெனும்பேர் பேதையரே
மாட்டுத் தெரிப்ப தொருபுகழோ
மடவா ருடன் மகிழ்நரென்றுஞ்

திருத்துங் கலைசைச் செங்கழுநீர்ச்
சிறுவா சிற்றில் சிதையேலே
தெள்ளித் தெளிந்தோர்க் கள்ளூறுஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. ரு

சிற்றிற்பருவம் முற்றிற்று.

## சி று ப றை ப் ப ரு வ ம்.

குறுகுறு நடந்தெய்தி யெம்பிரான் றிருமேனி
குழையமே லேறி வேணிக்
கொத்தினைக் கோட்டினிற் கோத்தலைத் துதறிவான்
குளிர்புனல் புழைக்கை யெற்றிப்
பொறியரவு தலைமாலை வெள்ளென்பு கைம்மாப்
புலிச்சரும முதலணி யெலாம்
பொள்ளென வெடுத்தெடுத் தங்கையன விற்பெய்து
போக்கியிள மதியை வன்றி
எறுழுலவை யொன்றப் பொருத்தித் திருக்கைமா
னிடைவைத்து முற்று மதிசெய்
திருவிசும் புய்த்துவான் றருத்தரும் பேரணிகொ
டெங்கணு மலங்க ரித்துச்
சிறுமையிலை யினியென வசைக்குங் கரங்கொண்டு
சிறுபறை முழக்கி யருளே
தென்கோ விருந்தநக ருற்பல விநாயகன்
சிறுபறை முழக்கி யருளே. க

இருக்கோல மிட்டின்னு மறியாத நின்ரு
ளிறைஞ்சாது தபு மாந்தருக்
கிறுதியிற் கட்கடை நெருப்புகச் சீறிவரு
மியமன் றருக்கோ தையும்

உருக்கோல மேவச் சிரக்கவச மாகமை
யுண்டவிழி வாளி புருவம்
ஒருதனு வெனக்கொண்ட சேனைக ணிரைத்தமர்
உழக்குமதன் வெற்றி முரசுங்
கருக்கோடி கோடியுற் றுழல்புறச் சமயக்
கருத்தினர் குரைக்கு மொலியுங்
காதுரு வண்ணமமிழ் தஞ்சொரிவ தேய்ப்பக்
கறங்கவடி யார்க ளுள்ளத்
திருக்கோயின் மேவிவிளை யாடுமிள மதகளிறு
சிறுபறை முழக்கி யருளே
தென்கோ விருந்தநக ருற்பல விநாயகன்
சிறுபறை முழக்கி யருளே. உ

வேறு.

சழக்குப் படுசில பேய்கண் மடிந்தவர்
சரிகுடர் வலைதாங்கித்
தடவுத் தோற்பல கைத்தொகை யாவுந்
தளைதரு தெப்பமெனப்
பழக்கித் திரையெறி குருதிச் செக்கர்ப்
பரவைப் பூம்புனலுள்
படர்ந்து நெடுந்தசை மூளை வழும்புகள்
பற்றி விருந்தயர
உழக்கிக் கடல்படு படைக ளனைத்து
முடைந்து பிதிர்ந்தலற
ஒன்னலர் சென்னி யுருட்டிக் கயமுக
னுரமிரு பிளவுசெய்து
முழக்குற் றிடுவிறன் மாமுர சாள
முழக்குக சிறுபறையே
முற்படு கலைசையி லுற்பல வேழ
முழக்குக சிறுபறையே. ந

குடங்கை குவித்திமை யோர்தொழ நின்று
குனிக்குந் தாதையிடங்
குறுகி யுரத்தொளிர் பன்றிக் கோடுங்
குளிர்சடை யிளமதியு
முடங்கு பறித்துக் குணிவிற் கைக்கொண்
டுயர்துடி கொட்டியவ
னுரித்தணி யும்பற் கோடு பிடுங்கிமு
னந்தியி யத்தையெழீஇ
வடங்கிளர் கொங்கைத் தூர்க்கை மிதித்திவர்
மகிடத் துலவைபறீஇ
மாலவ னின்னிய மோதி யெவர்க்கு
மகிழ்ச்சி தரக்களியான்
முடங்க லுருதெதி ராட்டயர் களிறு
முழக்குக சிறுபறையே
முற்படு கலைசையி லுற்பல வேழ
முழக்குக சிறுபறையே. ௪

மலைவற முப்பொரு ளியல்பு தெளித்தரு ளொருமுதலே
மலையென முற்படு வினைக ளறச்செயு மெமதுயிரே
அலையு மனத்தையு நிலையி னிறுத்திடு மருளுருவே
அமிழ்தி னினித்துடலிடனுமுகிழ்த்தொளிர் சிவவிளைவே
உலைவறு கற்பக மெனவருள் கொட்டிய மழகளிறே
உலகமனைத்துநி னுடலி லடக்கிய நிறைபொருளே
கலைசையி லுற்பல விறைவ முழக்குக சிறுபறையே
கடலொலி பிற்பட வினிது முழக்குக சிறுபறையே. ரு

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

---

## சிறுதேர்ப்பருவம்.

செக்கர்க் குருஉமணிச் சுடிகைப் பொறிப்படச்
சேடன் சுமந் தாற்றிடுந்
திண்புடவி முழுதுங் கிளைத்தறுத் தப்புறஞ்
சென்றுதன் பகைவாழ் விடம்
ஒக்கப் பெருந்துகள் படுத்திமோட் டாமையோ
டுடையநிண முண்டு பல்வின்
ஒண்குடரி னுதிகவ்வி யீர்த்துரீஇச் சிவபிரான்
உகளபத மன்று தேடப்
புக்குற்ற கேழல்பல் லூழிக ளிடந்தெய்த்த
புலமெலா மொருகணத்திற்
போந்துகீ ழண்டச் சுவர்த்தலை துளைத்துப்
புறங்கோத்த நீர் சுவற்றித்
திக்கெட்டு முட்டியுல வாகுப் பரிப்பாக
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் தென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதே ருருட்டி யருளே. க

நிறந்துளை கொடும்படை திறந்தபுண் வழிதொறு
நெருப்பெனக் குருதி பாய
நெடுங்கிரி யெனப்புரண் டார்த்துக் கடாக்கரியி
னிரையெலா மெங்கு மின்னுப்
புறந்தா விடித்தெழுங் கார்முகிற் கூட்டம்
பொரக்கிடந் தலற மள்ளர்
பொன்முடி கரங்கால் வழும்புகுடர் சோரிப்
புனன்மேன் மிதப்ப முற்றும்

பறந்தலைப் புக்குநரி கொடிகழுகு வெம்பேய்
பருந்தொடு விருந்து செய்யப்
பகைத்தகுவர் சேனைக் கடற்கிடைத் தோணியிற்
பாயுங் கொடிஞ்சி கிடுகாற்
சிறந்ததிண் டேர்பல வுருட்டும் பகட்டண்ணல்
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் தென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதே ருருட்டி யருளே. உ

விண்ணகத் தியங்கும் பசும்புரவி யேழ்பூண்ட.
வில்லுமிழ் கொடிஞ்சி யந்தேர்
வீற்றிருந் தூருஞ் சுடர்ப்பருதி வானவன்
வியந்துனைக் காணுந் தொறும்
பண்ணப் பணைத்தநந் தேரினும் விசைத்தேகு
பாழிமான் தேரு மிருளைப்
பருகிக் கதிர்க்கற்றை காலுநம் மொளியின்மேம்
பட்டபே ரொளியும் வாய்ப்பத்
தண்ணற் கருங்கட லுடுக்கைத் தலத்துச்
சரிக்குமொரு பரிதிப் பிரான்
தானுகு மென்றுள்ள மருளநின் திருமேனி
தண்பவள வொளி வீசிடத்
திண்ணப் பொலன்சகட் டவிர்மணிக் கூவிரச்
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் தென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதே ருருட்டி யருளே. ௩

அலைக்குமயில் வேல்விழிக் கன்னிமைப பருவத்
தணங்கினர் லைக்கு நிகராம்
அம்பொற் பொருப்பினைக் கோட்டினற் கன்னிமை
யழிந்த பருவத்து மடவார்

மூலக்குநிக ராகச் செயும்பிரம சாரியே
மூதண்ட மூன்று மந்த
மூரிப் பொலஞ்சிகரி பேர்த்தெடுத் தங்கையான்
முனியென்ன வாங்கி முற்றுந்
தொலைக்குமடன் முப்புரிசை வென்றநாட் சிவபிரான்
துண்ணென் றுகைத்த திண்டேர்த்
தொன்னிலை யழித்தக் கிரிக்குவான் பூதாச்
சொற்பெயரை நிலை பெறுத்துஞ்
சிலைக்குநிக ரொற்றையங் கோட்டுத் தனிக்களிறு
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் தென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதே ருருட்டி யருளே. ச

பெருங்கருணை சூற்கொண் டிருந்தசிவ காமிப்
பிராட்டியொர் சிதம்ப ரேசப்
பெருமா னெனப்படுங் கீர்த்தியிரு முதுகுரவர்
பேணியுனை யேக காலத்
தொருங்குமார் பத்துற வெடுத்தணைத் தொண்முத்த
முண்டுச்சி மோந்து கொள்ள
உன்னுதோ திருவர்களு மொற்றித்த வடிவுகொண்
டுறைபயன் பெற்று மகிழ
வருங்காட மாமதச் சிந்துரக் களபமே
மதிமுடிச் சடில மோலி
மாசுணப் போணியி னைங்கைக் குறுத்தாள
மதிவகிர்க் தனைய வொற்றைச்
சிருங்கனே சச்சிதா நந்தபர போகமே
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் தென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதே ருருட்டி யருளே. ரு

வண்டின முழக்கமுகை விண்டலர் பசுந்துழாய்
மாலையம் படலை மார்பின்
மாயோன் கிடக்கையை யுடுக்கையென் றுண்டமட
மங்கைக்கு மகுட மான
தொண்டைமண் டலம்வாழ மகுடம் பதித்தபொற்
சுடர்மணி நிகர்த்த தொல்சீர்த்
தொட்டிக் கலைப்பதி தழைக்கவப் பதிமருவு
தூயசிவ பத்தர் வாழக்
கண்டிகையும் வெண்ணீறு மஞ்செழுத்
தும்பொலிவு காட்டவை திகமார்க்கமுங்
கரிசற்ற சைவமும் வளர்ந்தோங்க வாங்குங்
கடற்புவி மகிழ்ச்சி துங்கத்
திண்டிமங் தாக்குங் குறட்கணஞ் சூழநீ
சிறுதே ருருட்டி யருளே
சிற்பரன் தென்கலைசை யுற்பல விநாயகன்
சிறுதே ருருட்டி யருளே. ௬0

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.



உ

கணபதி துணை.

வடலூர் - இராமலிங்க சுவாமிகள்

அருளிச்செய்த

# சித்திவிநாயகர் பதிகம்

---

கலிவிருத்தம்.

திருமா லறியாச் சேவடி யாலென்
கருமா லறுக்குங் கணபதி சரணம்
ஐங்கா னடிமல ரிங்குற நினைதிநின்
பொங்குறு துயரறும் மங்கலின் மனனே.

வெண்பா.

அஞ்சுமுகத் தான்மகன்மா லஞ்சுமுகத் தானருள்வான்
அஞ்சுமுகத் தானஞ் சணிகரத்தான்—அஞ்சுமுக
வஞ்சரையான் காணு வகைவதைத்தா னோரையோ
டஞ்சரையான் கண்க ளவை. க

வாதாகா வண்ண மணியேயெம் வல்லபைதன்
நாதாகா வண்ண நலங்கொள்வான்—போதார்
வனங்காத்து நீரளித்த வள்ளலே யன்பால்
இனங்காத் தருளா யெனை. உ

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உலகெலாந் தழைப்ப வருண்மத வருவி
யொழுகுமா முகமுமைங் காமும்
இலகுசெம் மேனிக் காட்சியு மிரண்டோ
டிரண்டென வோங்குதிண் டோளுந்

திலகவா ணுதலார் சித்திபுத் திகளைச்
சேர்த்தணைத் திடுமிரு மருங்கும்
விலகுறு தெளியேன் விழைந்தனன் சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. ௩

உள்ளமு முயிரு முணர்ச்சியு முடம்பு
முறுபொருள் யாவுநின் றனக்கே
கள்ளமுங் கரிசு நினைத்திடா துதவிக்
கழலிணை நினைந்துநின் கருணை
வெள்ளமுண் டிரவு பகலறி யாத
வீட்டினி லிருந்துநின் ஞேடும்
விள்ளலில் லாமற் கலப்பனே சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. ௪

நாதமுங் கடந்து நிறைந்துநின் மயமே
நானெனை வறிந்துநான் ருனும்
பேதமுங் கடந்த மௌனராச் சியத்தைப்
பேதையேன் பிடிப்பதெந் நாளோ
வேதமுஞ் சமய வாதமும் விடுத்தோர்
இதயமு மேழையேன் சிரமும்
வேதமுந் தாங்கும் பாதனே சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. ரு

சச்சிதா னந்த வடிவநம் வடிவந்
தருமதிட் டானமற் றிரண்டும்
பொய்ச்சிதா பாசக் கற்பனை யிவற்றைப்
போக்கியாங் கவ்வடி வாகி
அச்சிதா கார போதமு மதன்மேல்
ஆனந்த போதமும் விடுத்தல்
மெய்ச்சிதாம் வீடென் றுரைத்தனை சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. சு

ஒன்றல விரண்டு மலவிரண் டொன்றோ
டுருவல வருவல வுவட்ட
நன்றல நன்றல் லாதல விந்து
நாதமு மலவிவை யனைத்தும்
பொன்றலென் றறிந்துட் புறத்தினு மகண்ட
பூரண மாஞ்சிவ மொன்றே
வென்றலென் றறிநீ யென்றனை சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. எ

சத்தசத் தியன்மற் றறிந்துமெய்ப் போதத்
தத்துவ நிலைபெற விழைவோர்
சித்தமுற் றகலா தொளித்தநின் கமலச்
சேவடி தொழவெனக் கருள்வாய்
சுத்தசற் குணத்தெள் ளமுதெழு கடலே
சுகபரி பூரணப் பொருளே
வித்தக முக்க ணத்தனே சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. அ

மருளுறு மனமுங் கொடியவெங் குணமும்
மதித்தறி யாததுன் மதியும்
இருளுறு நிலையு நீங்கிநின் னடியை
எந்தநா ளடைகுவ னெளியேன்
அருளுறு மொளியா யவ்வெளிக் குள்ளே
அமர்ந்தசிற் பரவொளி நிறைவே
வெருளுறு சமயத் தறியொணுச் சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. சூ

கேவல சகல வாதனை யதனுற்
கீழ்ப்படு பவக்கடன் மூழ்கி
ஓவற மயங்கி யுழலுமிச் சிறியேன்
உன்னரு ளடையுநா ளுளதோ

பாவல ருளத்திற் பரவிய நிறைவே
பரமசிற் சுகபரம் பரனே
மேவுறு மடியார்க் கருளிய சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. கo

கானநீர் விழைந்த மானென வுலகக்
கட்டினை நட்டுழன் றலையும்
ஈனவஞ் சகநெஞ் சகப்புலை யேனை
யேன்றுகொண் டருளுநா ளுளதோ
ஊனமொன் றில்லா வுத்தம ருளத்தே
யோங்குசீர்ப் பிரணவ வொளியே
வேனவில் கரத்தோர்க் கினியவா சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே கக

பெரும்பொருட் கிடனும் பிரணவ வடிவிற்
பிறங்கிய வொருதனிப் பேறே
அரும்பொரு ளாகி மறைமுடிக் கண்ணே
யமர்ந்தபே ரானந்த நிறைவே
தரும்பர போக சித்தியுஞ் சுத்த
தருமமு முத்தியுஞ் சார்ந்து
விரும்பினோர்க் களிக்கும் வள்ளலே சித்தி
விநாயக விக்கிநேச் சுரனே. கஉ

---

## வல்லபை கணேசர் பிரசாதமாலை

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திருநெடு மாலன் றுவிடை நினது
சேவடித் துணைமலர்த் துகளான்
பெருநெடு மேனி தளிர்படப் பாம்பின்
பேருரு வகன்றமை மறவேன்

கருநெடுங் கடலைக் கடற்றுநற் றுணையே
கண்கண்மூன் றுடையசெங் கரும்பே
வருநெடு மருப்பொன் றிலகுவா ரணமே
வல்லபைக் கணேசமா மணியே. க

நளினமா மலர்வாழ் நான்முகத் தொருவ
னண்ணிநின் றுணையடி வழுத்திக்
களிநல னுடனிவ் வுலகெலாம் படைக்கக்
கடைக்கணித் ததையுள மறவேன்
அளிநல னுருபே ரானந்தக் கடலே
யருமருந் தேயரு ளமுதே
வளிநிறை யுலகுக் கொருபெருந் துணையே
வல்லபைக் கணேசமா மணியே. உ

சீருருத் திரமூர்த் திகட்குமுத் தொழிலுஞ்
செய்தரு ளிறைமைதந் தருளிற்
பேருருத் திரங்கொண் டிடச்செயு நினது
பெருமையை நாடொறு மறவேன்
ஆருருத் திடினு மஞ்சுதல் செய்யா
ஆண்மையெற் கருளிய வரசே
வாருருத் திடுபூண் மணிமுகக் கொங்கை
வல்லபைக் கணேசமா மணியே. ந

விண்ணவர் புகழு மெய்கண்ட நாதன்
வித்தகக் கபிலனு தியர்க்கே
கண்ணருள் செயுநின் பெருமையை யடியேன்
கனவினு நனவினு மறவேன்
தண்ணருட் கடலே யருட்சிவ போக
சாரமே சராசர நிறைவே
வண்ணமா மேனிப் பரசிவ களிறே
வல்லபைக் கணேசமா மணியே. ச

நாரையூர் நம்பி யமுதுகொண் டேட்ட
நற்றிரு வாய்மலர்ந் தருளிச்
சீரைமே வுறச்செய் தளித்திடு நினது
திருவரு ளுடொறு மறவேன்
தேரையூர் வாழ்வுந் திரமல வெனுநற்
றிடமெனக் கருளிய வாழ்வே
வாரையூர் முலையாண் மங்கைநா யகியெம்
வல்லபைக் கணேசமா மணியே. ரு

கும்பமா முனியின் கரகநீர்க் கவிழ்த்துக்
குளிர்மலர் நந்தனங் காத்துச்
செம்பொனாட் டிறைவற் கருளிய நினது
திருவருட் பெருமையை மறவேன்
நம்பனூர்க் கினிய வருண்மகப் பேறே
நற்குணத் தோர்பெரு வாழ்வே
வம்பறு மலர்த்தார் மழைமுகிற் கூந்தல்
வல்லபைக் கணேசமா மணியே. ௬

அயன்றவத் தீன்ற சித்திபுத் திகளாம்
அம்மைய ரிருவரை மணந்தே
இயன்றவண் டங்கள் வாழ்வுறச் செயுநின்
னெழின்மணக் கோலத்தை மறவேன்
பயன்றருங் கருணைக் கற்பகத் தருவே
பரசிவத் தெழுபரம் பரமே
வயன்றரு நிமல நித்தியப் பொருளே
வல்லபைக் கணேசமா மணியே. எ

முன்னருந் தவத்தோன் முற்கலன் முதலா
முனிவர்க ளினிதுவீ டடைய
இன்னருள் புரியு நின்னருட் பெருமை
யிரவினும் பகலினு மறவேன்

என்னரும் பொருளே யென்னுயிர்க் குயிரே
யென்னர சேயென துறவே
மன்னரு நெறியின் மன்னிய வறிவே
வல்லபைக் கணேசமா மணியே. அ

துதிபெறுங் காசி நகரிடத் தனந்தந்
தூயநல் லுருவுகொண் டாங்கண்
விதிபெறு மனைக டொறும்விருந் தினனாய்
மேவிய கருணையை மறவேன்
நதிபெறுஞ் சடிலப் பவளநற் குன்றே
நான்மறை நாடரு நலமே
மதிபெறு முளத்திற் பதிபெறுஞ் சிவமே
வல்லபைக் கணேசமா மணியே. கூ

தடக்கைமா முகமு முக்கணும் பவளச்
சடிலமுஞ் சதுர்ப்புயங் களுங்கை
இடக்கையங் குசமும் பாசமும் பதமும்
இறைப்பொழு தேனும்யான் மறவேன்
விடக்கள முடைய வித்தகப் பெருமான்
மிகமகிழ்ந் திடவருட் பேறே
மடக்கொடி நங்கை மங்கைநா யகியெம்
வல்லபைக் கணேசமா மணியே. கய

பெருவய லாறு முகனக லமர்ந்துன்
பெருமைகள் பேசிடத் தினமுந்
திருவளர் மேன்மைத் திறமுறச் சூழுந்
திருவருட் பெருமையை மறவேன்
மருவளர் தெய்வக் கற்பக மலரே
மனமொழி கடந்தவான் பொருளே
வருமலை வல்லிக் கொருமுதற் பேறே
வல்லபைக் கணேசமா மணியே. கக

# கணேசத் திருவருண்மாலை

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவுங் கல்வியுஞ் சீருஞ் சிறப்புமுன்
திருவ டிப்புகழ்ப் பாடுந் திறமுநல்
உருவுஞ் சீலமு மூக்கமுந் தாழ்வுரு
வுணர்வுந் தந்தென துள்ளத் தமர்ந்தவா
குருவுந் தெய்வமு மாகியன் பாளர்தங்
குறைத விர்க்குங் குணப்பெருங் குன்றமே
வெருவுஞ் சிந்தை விலகக் கஜானனம்
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. க

சீத நாண்மலர்ச் செல்வனு மாமலர்ச்
செல்வி மார்பகச் செல்வனுங் காண்கிலாப்
பாத நாடொறும் பற்றறப் பற்றுவோர்
பாத நாடப் பரிந்தருள் பாலிப்பாய்
நாத நாடிய வந்தத்தி லோங்குமெய்ஞ்
ஞான நாடக நாயக நான்கெனும்
வேத நாடிய மெய்ப்பொரு ளேயருள்
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. உ

என்னை வேண்டி யெனக்கருள் செய்தியேல்
இன்ன னீங்குநல் லின்பமு மோங்குநின்
தன்னை வேண்டிச் சரண்புகுந் தேனென்னைத்
தாங்கிக் கொள்ளுஞ் சரண்பிறி தில்லைகாண்
அன்னை வேண்டி யழுமகப் போல்கின்றேன்
அறிகி லேனின் திருவுள மையனே
மின்னை வேண்டிய செஞ்சடை யாளனே
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. ௩

நீண்ட மாலர வாகிக் கிடந்துநின்
　　னேயத் தால்கலி நீங்கிய வாறுகேட்
டாண்ட வாநின் னடைக்கல மாயினேன்
　　அடிய னேன்பிழை யாயிர மும்பொறுத்
தீண்ட வாவின் படிகொடுத் தென்னைநீ
　　யேன்று கொள்வதற் கெண்ணுதி யாவரும்
வேண்டு வாழ்வு தரும்பெருந் தெய்வமே
　　விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. ௪

தஞ்ச மென்றுனைச் சார்ந்தன னெந்தைநீ
　　தானு மிந்தச் செகத்தவர் போலவே
வஞ்ச மெண்ணி யிருந்திடி லென்செய்வேன்
　　வஞ்ச மற்ற மனத்துறை யண்ணலே
பஞ்ச பாதகந் தீர்த்தனை யென்றுநின்
　　பாத பங்கயம் பற்றினன் பாவியேன்
விஞ்ச நல்லருள் வேண்டித் தருதியோ
　　விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. ௫

கள்ள நெஞ்சக னாயினு மையநான்
　　கள்ள மின்றிக் கழறுகின் றேனென
துள்ள நின்திரு வுள்ள மறியுமே
　　யோது கின்றதென் போது கழித்திடேல்
வள்ள மாமலர்ப் பாதப் பெரும்புகழ்
　　வாழ்த்தி நாத்தழும் பேற வழங்குவாய்
வெள்ள வேணிப் பெருந்தகை யேயருள்
　　விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. ௬

மண்ணி லாசை மயக்கற வேண்டிய
　　மாத வர்க்கு மதிப்பரி யாயுனை
எண்ணி லாச்சிறி யேனையு முன்னின்றே
　　யேன்று கொண்டனை யின்று விடுத்தியோ

உண்ணி லாவிய நின்திரு வுள்ளமும்
ஆசை யோடுவர்ப் புங்கொள வொண்ணுமோ
வெண்ணி லாமுடிப் புண்ணிய மூர்த்தியே
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. ௭

ஆணி லேயன்றி யாருயிர்ப் பெண்ணிலே
அலியி லேயிவ் வடியனைப் போலவே
காணி லேனொரு பாவியை யிப்பெரும்
கள்ள நெஞ்சக் கடையனை யானையா
ஏணி லேயிட ரெய்த விடுத்தியேல்
என்செய் கேனினி யிவ்வுல கத்திலே
வீணி லேயுழைப் பேனரு ளையனே
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. ௮

வாளி லேவிழி மங்கையர் கொங்கையா
மலையி லேமுக மாயத்தி லேயவர்
தோளி லேயிடைச் சூழலி லேயுந்திச்
சுழியி லேநிதஞ் சுற்றுமென் னெஞ்சநின்
தாளி லேநின் தனித்த புகழிலே
தங்கும் வண்ணந் தரவுளஞ் செய்தியோ
வேளி லேயழ கானசெவ் வேளின்முன்
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. ௯

நாவி னானுனை நாடோறும் பாடுவார்
நாடு வார்தமை நண்ணிப் புகழவும்
ஓவி லாதுனைப் பாடவுந் துன்பெலாம்
ஓட வும்மகி ழோங்கவுஞ் செய்குவாய்
காவி நேர்களத் தான்மகி ழைங்கரக்
கடவு ளேநற் கருங்குழி யென்னுமோர்
மேவி யன்பர்க் கருள்கண நாதனே
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. ௧௦

# தனித்திருமாலை

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

திங்களங் கொழுந்து வேய்ந்த செஞ்சடைக்
கொழுந்தே போற்றி
மங்கைவல் லபைக்கு வாய்த்த மகிணநின்
மலர்த்தாள் போற்றி
ஐங்கர நால்வாய் முக்கண் ணருட்சிவ
களிறே போற்றி
கங்கையான் மகிழுஞ் செல்வக் கணேசநின்
கழல்கள் போற்றி. க

கலிவண்ணத்துறை.

உலகம் பரவும் பொருளென் கோவென் னுறவென்கோ
கலகம் பெருமைம் புலன்வென் றுயருங் கதியென்கோ
திலகம் பெறுநெய் யெனநின் றிலகுஞ் சிவமென்கோ
இலகைங் கரவம் பலநின் றனையென் னென்கேனே. உ

அடியா ருள்ளத் தித்தித் தூறு மமுதென்கோ
கடியார் கொன்றைச் செஞ்சடை யானைக் கன்றென்கோ
பொடியார் மேனிப் புண்ணியர் புகழும் பொருளென்கோ
அடிகேள் சித்தி விநாயக வென்னென் றறைகேனே. ௩

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கமலமல ரயனயன் முதலமர ரிதயமுறு
கரிசகல வருள்செய்பசு பதியாம்
நிமலநிறை மதியினொளிர் நிரதிசய பரமசுக
நிலையையருள் புரியுமதி பதியாம்
விமலபிர ணவவடிவ விகடதட கடகரட
விபுலகய முகசுகுண பதியாம்
அமலபர சிவவொளியி னுதயசய விசயசய
வபயமெனு மெமதுகண பதியே. ச

கட்டளைக்கலித்துறை.

அம்பொன்று செஞ்சடை யப்பரைப் போற்றன் னடியர்தந்துக்
கம்பொன்றும் வண்ணங் கருணைசெய் தாளுங் கருதுமினே
வம்பொன்று பூங்குழல் வல்லபை யோடு வயங்கியவெண்
கொம்பொன்று கொண்டெமை யாட்கொண் டருளிய குஞ்சரமே.

கலிவிருத்தம்.

அற்புதக் கணபதி யமல போற்றியே
தற்பர சண்முக சாமி போற்றியே
சிற்பர சிவமகா தேவ போற்றியே
பொற்பமர் கௌரிநிற் போற்றி போற்றியே. ௬

அருளுறுங் கயமுகத் தண்ணல் பாதமும்
பொருளுறு சண்முகப் புனிதன் றாள்களுந்
தெருளுறு சிவபிரான் செம்பொற் கஞ்சமும்
மருளற நாடொறும் வணங்கி வாழ்த்துவாம். ௭

வண்ணக்கலிவிருத்தம்.

துதிபெறு கணபதி யிணையடி மலரும்
பதிதரு சரவண பவன்மல ரடியுங்
கதிதரு பரசிவ னியலணி கழலும்
மதியுற மனனிடை மருவுது மிகவே. ௮

வண்ணவெண்சீர்விருத்தம்.

கலிநிறை கணபதி சரணஞ் சரணம்
கஜமுக குணபதி சரணஞ் சரணம்
தலைவனி னிணையடி சரணஞ் சரணம்
சரவண பவகுக சரணஞ் சரணம்
சிலைமலை யுடையவ சரணஞ் சரணம்
சிவசிவ சிவசிவ சரணஞ் சரணம்
உலைவறு மொருபரை சரணஞ் சரணம்
உமைசிவை யம்பிகை சரணஞ் சரணம். ௯

உ

கணபதி துணை

காசியிலெழுந்தருளியிருந்த தருமபுர ஆதீனத்துச்

சிவஞானதேசிகர்

அருளிச்செய்த

# காசித்துண்டி விநாயகர் திருவருட்பா.

---

சீர்கொண்ட காசிநகர் சேர்துண்டி ராசனெனும்
பேர்கொண்ட வைங்கரற்குப் பேசுபுகழ்த்—தார்கொண்ட
நற்றிருப்பாட் டுரைத்து ஞாலமிசைத் தொண்டரெலாம்
கற்றிருப்பார் மேலாங் கதி.

ஓங்கார வடிவான வுன்பாத தாமரையும்
உபயபரி புரமறை களும்
உதிக்கின்ற செங்கதிர்க ளொருகோடி நிகரொளியும்
உத்தூள நீற்றி னொளியும்
பாங்கார் கசானனமு முககரமும் வளர்புயப்
பவளா சலங்க ளுன்கும்
பாசமுட னங்குசங் கொம்போ ரிலட்டுகம்
பக்ஷமொடு வைத்த கரமும்
நீங்காத வருண்மாரி பொழியுந் த்ரியம்பகமும்
நிறையுமும் மதமாரியும்
நீள்சடா டவியும்வெண் பிறையுமொரு தொந்தியும்
நெஞ்சிலொரு காலு மறவேன்
காங்கேயன் மகிழ்தமைய னேகங்கை நதிபெருகு
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே. க

அருளா லுருக்கொண்ட ஆனந்த வெள்ளமே
யனந்த சூரிய ருதயமே
ஆயிரங் கோடிசந் திரருதய மேயின்ப
மானமழை பொழி மேகமே
திருவே பெருஞ்செல்வ மேகாம தேனுவே
சிந்தாமணிக் குவியலே
தேனுவின் பாலுடன் கற்பகப் பூவிலெழு
செந்தேன் கலந்த கடலே
தருவான கற்பகச் சோலையே யெல்லாந்
தரும்பெரிய பதும நிதியே
சங்கநிதி யேயுண்ண வுண்ணத் தெவிட்டாத
தண்ணமிர்தி னதிமதுரமே
கருகூல மேயென் றுனைப்பாடி யுருகவருள்
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே. உ

உன்னொரு கையிற்கொம்பு வெள்ளியங் கயிலையாம்
ஒருகனக கிம்புரிக்கொம்
புயர்மேரு கிரியாகு மேனிசெவ் வானமாம்
ஓங்கு கங்கண மனந்தன்
வன்னிரவி சந்திரன் திருநயன மேமேனு
மகாசலதி கண்மும்மதம்
வளர்சண்ட மாருதஞ் செவிமா ருதஞ்சக்ர
வாளகிரி நீடுதிக்கை
பன்னுநான் மறைசிலம் பொங்கு காலாக்கினி
பரந்தநற் கோபாக்கினி
பரிபாக ரைக்கொண்டு குற்றேவல் கொள்ளும்
பரப்பிரம மத்த கசநீ

கன்னெஞ்ச னேன்மலக் காட்டைமுரி யாததென்
காசிவாழ் துண்டி ராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே. ௩

குஞ்சரக் கன்றுநீ யொழியாம னிற்கின்ற
கூடமென் னிதய வெளியாம்
குழந்தைவடி வாமிளைய பன்னிருகை மழகளிறு
கூடவிளை யாடிநிற்க
அஞ்சுதொழி லுனதுவிளை யாட்டாக மதசலம்
அருள்கிரியை ஞான மிச்சை
யாகவைந் தொழினடத் தகராதி நாதவொலி
யானையுன் பெருமுழக்கா
நெஞ்சினிறை வாந்திரோ தானகோ பத்தைநீ
நீக்கியென் றற்போதமாய்
நிறைகவள மருள்வாயி னுலுண்டு கர்ச்சித்து
நீமகிழ்வ தென்றோ சொலாய்
கஞ்சன்முத லோர்தொழக் கங்கைநதி சூழ்பெரிய
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே. ௪

தேவர் கணபதி வித்தியா தரர்கள்கணபதி
சிவயோக முனிகணபதி
சித்தர் கணபதி பூதர்கணபதி ஞானமே
திகழிராக்ஷசர் கணபதி
கேவலமி லசுரர் கணபதி கருடர்கணபதி
கிளர்தயித்தியர் கணபதி
கின்னரர்கள் கணபதி கிம்புருடர் கணபதி
கெந்தருவ ராங்கணபதி

பாவமறு போகபூ மியர்கள்கண பதியம்
பரத்தில் வாசிகள் கணபதி
பசாசர்கண பதியுடக் கணபதி யக்ஷர்கண
பதியுரகராங் கணபதி
காவலென் றுரைசெய்பதி னெண்கணப திப்பெரிய
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே. ரு

இருவருக் கரிதாகி யெங்குநிறை தந்தையாம்
ஏகபரி பூரணர்க்கும்
இந்த்ராதி முப்பத்து முக்கோடி தேவர்க்கும்
எண்ணிலா முனிவ ருக்கும்
தருமணிக ளொளிவிடுங் கணபணு டவியுரக
சயனத்து மாமனுர்க்கும்
சதுரா னனர்க்குமெண் டிசைநா யகர்க்கும்வளர்
சகலபுவ னங்களுக்கும்
ஒருபூ ரணப்பிரம மேயென் றுனைத்துதித்
துவப்போடு தங்கள் சென்னி
உபயகர மேற்கொண்டு குட்டியே நற்றெழில்கள்
ஒன்றுசெயல் வேண்டுமென்றால்
கருதரிய நின்புகழை யெளியனே னறிவனே
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே. சு

அண்ணாவு னவிமுத்த மகலா திருந் துமரு
ளாங்கங்கை நதிபடிந்தும்
ஐங்கரத் தெய்வமு னடித்தா மரைப்பூவை
யர்ச்சித் திருந்து மடியேன்

மண்ணாதி நாதாந்த மானதே காதிப்பிர
பஞ்ச மெல்லா மறந்தே
மகோதய மனோலயா னந்தவாழ் வடையாமன்
மாளுமெய்ப் பிணியி லுற்றும்
எண்ணாத வெண்ணங்க ளெண்ணியும் பகலிலே
யிருளின் மூழ்கிக் கிடந்தும்
யானென்று மெனதென்று முன்னிலையை நாடியு
மேங்கியிடர் படனீதியோ
கண்ணாள னேயுனைக் கண்டுகுறை தீரவருள்
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே. எ

உன்னுரு வையும்முனக் கிளையவன் னுருவையும்
உன்தந்தை யருளுருவையும்
உன்னன்னை யுருவையு முன்னடிய ருருவையும்
ஒன்றெனப் னிந்தவுருவை
இன்னமென் கண்கொண்டு கண்டிடவு மெய்யடியர்
ஏவல் செய்தே திரியவும்
இணையடிக ளென்சென்னி வைத்திடவு மருள்பெறவும்
இன்பவாரிதி மூழ்கவும்
அன்னைபிள் ளையையா தரிப்பதென வேயென்னை
யாதரித் தேவல்கொளவும்
ஆசைவைத் தேனிந்த வாக்கைவிழு முனமிந்த
ஆசைதீரப் பெறுவனோ
கன்னெஞ்ச னேன்முன்பு நீவருவ தெந்தநாள்
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணாநிதிக் கடவுளே. அ

இரவில்லை பகலிலை யிலாப சேதங்களிலை
யின்பதுன் பங்களில்லை
யானில்லை யெனதில்லை யிதமில்லை யகிதமிலை
யெண்டிசைகள் காலமில்லை
வரவில்லை போக்கில்லை பாவபுண் ணியமில்லை
மரணம் பிறப்புமில்லை
மண்ணுதி யாசையிலை மனமான பேயில்லை
மலமாயை யில்லையென்று
பரவுபட் டப்பக லெனும்பெரிய வுன்வடிவு
பார்த்திருக் கின்றவடியார்
பாததா மரைபரவி நானுமவர் போலுனைப்
பார்க்கவர மென்றருளுவாய்
காதலா மலகமென முத்தியருள் கங்கைசூழ்
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணுநிதிக் கடவுளே. கூ

தேகபா ரம்பொறுக் கப்படுகு தில்லையென்
செய்குவேன் தெய்வமேயுன்
திருவடித் தாமரையை நம்பினே னீயலால்
திக்குவே றில்லை யுலகில்
ஆகமாகாதுசீ யென்றரு வருத்தபேர்க் கருள்வே
னெனுஞ்சொல் பொய்யோ
ஐயவுனை மறவாத வாநந்த வாழ்வன்றி
யமரர் வாழ்வும் விரும்பேன்
பாகமே யில்லாத நான்வார ணுசியிற்
பரவுமொரு மணிகன்னிகைப்
பாகீரதிக் குள்ள நாயாச மாகமெய்ப்
பாரம்விட வருளளிப்பாய்
காகமா தியசரா சரமெலாங் கதிபெறுங்
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேயருட்
கருணுநிதிக் கடவுளே. கο

---

உ

கணபதிதுணை.

## ஸ்ரீமத் - மாம்பழக் கவிச்சிங்கர்

இயற்றிய

# விநாயகமூர்த்தி பதிகம்

---

### நேரிசை வெண்பா.

சிற்றுணர்வாற் குற்றமென்ன செய்துளே னேனுமவை
முற்றுமினிநீபொறுத்தென்முன்னிற்பாய்—கற்றுயர்ந்தோர்
புந்திதனிற் றோன்றிப் பொழியுங் கருணைமதத்
தந்திமுகப் பிள்ளாய் சரண். க

சரணமலர் வாழ்த்தித் தமிழ்சொலப்பெற் றோர்க்கு
மரணபவ மாற்று மருந்தே—கிரணவரைக்
கொப்போதுந் தும்பிமுகத் தோங்காரத் துட்பொருளே
எப்போதுங் காப்பா யெனை. உ

எனைத்துந் திருவருளா லீன்றளிக்குந் தேவே
நினைத்தன் பொடுதுதித்து நின்றோர்—வினைத்துன்ப
மாற்றுங் கயமுகத்து வள்ளால் விரைந்தெனையீ
டேற்றுஞ் சமைய மிது. ௩

சமையந் தொறுநிறைந்த தற்பரமே யன்பர்க்
கமையுந் தனித்தெள் ளமுதே—புமைதந்த
கண்மணியே யானைமுகக் கற்பகமே பேரின்ப
விண்மணியே யாள்வாய் விரைந்து. ௪

விரைததும்பு ஞானமத வேழமுகத் தெந்தாய்
உரைகடந்து நின்ற வொளியே—வரைவிளங்கப்

பாரதத்தை முன்னெழுதும் பாசாங் குசதரவென்
கோரதத்தை மாற்றியருள் கூர். ரு

கூரியவேற் கண்ணார் கொடியமய லைத்தவிர்த்துச்
சீரியபே ரின்பத் திறனருளிப்—பாரிலெனை
நீயடிமை கொண்டு நிதங்காத் திடல்வேண்டுந்
தூயமத வேழமுகத் தோய். சு

தோயுங் களப சுகந்தமட வார்விரகப்
பேயுங் கவலைப் பிணியுமினி—யோயும்
படிபுரிந்து வேழமுகப் பண்ணவனே யென்னை
அடிமைகொண்டு நீயாண் டருள். எ

அருளா யுருவா யருவாய்ப்பே ரின்பத்
தெருளாய் முதியமறை தேடும்—பொருளாய
தந்திமுகத் தோனே தமியேன் குறித்தவரம்
வந்தினிது தந்துதவு வாய். அ

வாயாலு லுத்தர்தமை வாழ்த்திவருந் தாமலெனை
நீயா தரித்து நிதங்காப்பாய்—வீயாத
தொண்டரித யாம்புயமாந் தூயமணிக் கோயில்குடி
கொண்டகண நாதவருள் கூர்ந்து. கூ

கூர்ந்தமதி தந்தடிமை கொண்டெனையாள் வேதமின்னஞ்
சார்ந்தறிய மாட்டாத் தனிக்களிறே—தேர்ந்து
நடைசிறந்த நின்சீர் நவிலுந் திறமை
உடையதன்றே யென்சிற் றுணர்வு. கo

கணபதி துணை.

# சிவபுராண
# விநாயகர் தோத்திரங்கள்.

---

### கந்தபுராணம்.

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம். க

உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னோடை
வச்சிர மருப்பி னொற்றை மணிகொள்கிம் புரிவ யங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம். உ

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம். ௩

### கோயிற்புராணம்.

தன்னோங்கு மலரடியுந் தளிரோங்கு சாகைகளும்
மின்னோங்கு முகக்கொம்பும் விரவியகண் மலர்களுமாய்
மன்னோங்க நடமாடு மன்றோங்கு மதிற்குடபாற் [போற்றி.
பொன்னோங்கன் முன்னோங்கும் பொற்பமர்கற் பகம்

### சேக்கிழார் நாயனர் புராணம்.

வானுலகு மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத வைந்துகர மூன்றுவிழி நால்வா
யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் கிற்பாம். ரு

மலரயனுந் திருமாலுங் காணுமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயில்
நிலவியகற் பகக்கன்றி னிரைமலர்த்தா ளிணைபோற்றி. சு

### திருவிளையாடற்புராணம்.

உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந்
தறிநிறுவி யுறுதி யாகத்
தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி
யிடைபடுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம். எ

### சிதம்பரபுராணம்.

வான நாடர்கண் மாதவர் நாடரும்
மோன ஞான முழுதுமு ணர்ந்திடத்
தான மேவுந் தடவிக டாசலத்
தானை மாமுகத் தண்ணலை யேத்துவாம். அ

நெடியவெழு பவக்கடலை யுழக்கிவினைக்
கிரிநூறி நீங்கா தோங்குங்
கொடியகுணம் புலன்கரண முதலான
பகைப்படையைக் குலைய மோதி

அடியவர்தங் கருத்தளிசூழ்ந் தாலிக்கக்
கருணைமத வாறு பாயும்
படிபுகழுந் தில்லைவனக் கற்பகக்குஞ்
சரத்திருதாள் பணிதல் செய்வாம். கூ

## சேதுபுராணம்.

தொடர்கின்றவிடுக்கண்வெற்புத்துகள்படத்துளைக்குமே
அடர்கின்றவதற்குநாதனுகியவைங்கைமுக்கட் [லோன்
படர்வென்றிப்பகவன்முன்னைப்பவமுதற்படியினெல்லா
இடர்நின்றும்புரக்கவெம்மையெங்கணுமெந்தஞான்றும். க0

## திருப்பரங்கிரிப்புராணம்.

நலந்த ழைத்திடு நற்பத நீழலைக்
கலந்த வர்க்குக் கருணைய ரும்பிநின்
றலர்ந்த வானந்தத் தேனுக வானன
மலர்ந்த கற்பக வேழத்தை வாழ்த்துவாம். கக

வஞ்சகத்தி லொன்றுனைத் துதிக்கைமிகத்
திரண்டானை வணங்கா ருள்ளே
அஞ்சரண மூன்றுனை மறைசொலுநால்
வாயானை யத்த னுகித்
துஞ்சவுணர்க் கஞ்சானைச் சென்னியணி
யாறுனைத் துகளெ ழானைச்
செஞ்சொன்மறைக் கெட்டானைப் பரங்கிரிவாழ்
கற்பகத்தைச் சிந்தை செய்வாம். கஉ

## திருவாரூர்ப்புராணம்.

திருமன்னு வேள்விமறை முனிவர்மனப்
புலத்தெழுந்து சிறப்பி னேங்கிக்
கருணைதழைத் தறமரும்பி ஞானம்பூத்
தகல்வினையைக் காய்த்துத் தொல்லை

இருளகன்ற முத்திபழுத் தின்பநறுஞ்
சுவையென்று மினிது நல்கு
மருமலிபூம் பொழிலாரூர் மாற்றுரைத்த
கற்பகத்தை வணங்கி வாழ்வாம். கரு

## இலிங்கபுராணம்.

நீர்கொண்ட செஞ்சடில நிமலனிடப்
பாகமெலா நிறைந்து வாழுங்
கார்கொண்ட மலர்க்கூந்தற் கன்னன்மொழிக்
கவுரிதிரு வயிறு வாய்த்த
ஏர்கொண்ட வெள்ளைமதி யிளங்கொழுந்து
மருட்டுதனி யெழில்வெண் கோட்டுச்
சீர்கொண்ட மதக்களிற்றின் சேவடிப்பூங்
கமலமலர் சென்னி சேர்ப்பாம். கச

## பிரமோத்தரகாண்டம்.

பிஞ்சுமதிச் சடாமகுடப் பெருமானைப் பிரியாத
வஞ்சியிம வான்றவத்தின் வருபேடை மயிலுதவு
மஞ்சிறைவண் டிரைத்துவிழு மருவிமத மொழுகுகவுட்
குஞ்சரவெம் புகர்முகத்துக் குரிசிலடி யிணைதொழுவாம்.

## கூர்மபுராணம்

வெண்ணிலாக் கற்றை கான்று
விளங்குமோர் பிறைக்கோ டின்றி
எண்ணிலோர் பாகங் கூந்தற்
பிடியென விருந்த வாற்றாற்
பெண்ணொரு பாகம் வைத்த
பிஞ்ஞக னுருவு காட்டும்
அண்ணலங் களிநல் யானை
அடிமலர் சென்னி வைப்பாம். கரு

### காசிகண்டம்

கரைபொரு கங்கை யாற்றிற் காளிந்தி மடுப்ப தென்னச்
சொரிமதக் கலுழி வெள்ளஞ் சுழித்துவார்ந் தொழுகக் காசி
திருநக ரினிது வைகுந் திங்களங் குழவிக் கோட்டு [த்
வரைபுரை களிநல் யானை மலரடி வணங்கு வாமே. கஎ

### வாயுசங்கிதை

கார்தவழ் கயிலை வலியுடை யரக்கன்
கையினு லலைவுறு வண்ணம்
ஏர்பெறத் திணிபூண் கட்டிய தேய்ப்ப
விரும்பெரும் பணைநெடுங் காத்தால்
ஆர்வுறத் தழுவி முகிலென முழங்கி
யடியவர்க் காரருள் புரியுந்
தாரணி மவுலி யைங்கரக் கடவுள்
தாளிணை தலையினுற் பணிவாம். கஅ

### மச்சபுராணம்

தழைத்தமலர்க் கொன்றைபுனை சடாமகுடத்
தெம்மானைத் தழுவிக் கொங்கை
குழைத்தமலை மகளீன்ற கழைசுளிக்குஞ்
சிறுபிறைவெண் கோட்டு நால்வாய்
மழைத்தடக்கார் மேகமென வூற்றிருந்தா
ற்வட்டிமத தாரை சிந்தும்
புழைத்தடக்கை விகடதடக் கும்பமத
களிற்றிணைதாள் போற்றல் செய்வாம். ககூ

### தக்ஷிணகைலாச புராணம்.

செம்முளரி யுங்கதையுஞ் சக்கரமும்
வெண்கோடுஞ் சிலையும் பாம்பும்
விம்முமணிப் பொற்குடமுங் கழுநீரு
முத்தலையும் விளங்குந் தந்தித்

தம்முகமு மாதுளமுந் தரித்தொருபால்
வல்லபையுந் தரித்த சோதிக்
கைம்முகனை மறவாதென் னிதயமுமென்
புந்தியுமென் கருத்துந் தாமே. ௨௦

பிரபுலிங்கலீலை.

மார னெடுத்து வளைக்குமொரு கரும்பை யொடித்து மலர்
நாரி யடுத்த வளிமாலை குலையத் துரந்து நயந்தோடி [சிதறி
வீர மனத்து வினைப்பாகர் குறிப்பி னுழுகி விளையாடும்
ஈர மதிச்செஞ் சடைக்களிநல் யானை யிணைத்தா ளேத்து
[வாம். ௨௧

திருக்கூவப்புராணம்.

குவவத் தந்தக் குளிர்விண் வளத்துறக்
கவளத் தந்தக் கரண மிருத்திய
பவளத் தந்தப் படிவ நிகர்த்தொளிர்
தவளத் தந்தத் தலைவனை வாழ்த்துவாம். ௨௨

கற்றைநெடுஞ் சடாமவுலிப் பிறையுமொரு
தன்கோடுங் கரத்திற் சேர்த்தி
மற்றைநிறை மதியாக்கி மறுவிகந்து
வல்லபைதன் வடிவு பூத்த
நெற்றிநிகர்த் தமையன்றி யழகொழுகு
திருமுகத்தை நிகர்ப்ப நேயம்
பெற்றமழ களிற்றைமனச் சேவகத்தி
னிறுவியிடர்ப் பிறவி தீர்ப்பாம். ௨௩

விருத்தாசலப்புராணம்.

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம். ௨௪

ஒருமலையாற் புரமலையு மொருமைந்தன் திருமைந்தன்
இருமலையுந் தும்மலையு மெதிர்மலையும் வினைமலையும்
பொருமலையும் விம்மலையும் பொம்மலையும் புடைத்தருளிக்
கருமலையும் பெருமலையிற் கைம்மலையைக் கைதொழுவாம்.

திருவையாற்றுப்புராணம்.

ஞால மெல்லா நயந்து திறையிடுங்
கால னஞ்சுங் கடும்பிணி நீங்கிடும்
கோல நல்குங் குறையா நிதிதரும்
ஓல மென்ற களிற்றினை யுள்குவாம். உசு

சீகாளத்திபுராணம்.

தருமஞ் சந்திகழ் தாமரை யோன்பதங்
கருமஞ் சந்தி கடுப்பவர் வாழ்பதந்
துருமஞ் சந்திரற் றோய்திருக் காளத்தி
வருமஞ் சந்தி மழைமத யானையே. உஎ

தாய்குறங் கேறித் தந்தை சடையிடை மதிகே துப்பேர்க்
காய்சின வரவென் றஞ்சிக் கடுக்கையுட் புகக்கை நீட்டிப்
பாய்புனன் முகந்து நின்று பழிச்சுநர் வாயி லீன்றோர்
வாய்நகை தழைப்ப வீசு மழைமதக் களிற்றைத் தாழ்வாம்.

திருக்கழுக்குன்றப்புராணம்.

பூவேழம் போதிகளாம் புரவேழம்
பூவழியிற் பொழியும் பைந்தேன்
காவேழம் புதமென்னுங் கருவேழம்
பாதிநெடுங் காக்குங் காவற்
கோவேழம் பயந்தமுத்தங் கொடுத்தகனிக்
கடுத்தகனிக் குவையோ டப்ப
மாவேழம் படைத்தவண்டு வனவேழம்
புரக்கவென்று வணக்கஞ் செய்வாம். உகூ

### திருக்காளத்திபுராணம்.

செஞ்சந்தச் சேறளவிச் செழுந்திதலை பொதிந்தமுலைப்
பஞ்சஞ்சு மெல்லடியின் பனிவரைமா மகளுயிர்த்த
அஞ்சந்திப் பிள்ளையெனு மருவிமத மழகளிற்றை
நெஞ்சந்தங் கியவுவப்பான் முச்சந்தி தொறுநினைவாம். ௩௦

### செவ்வந்திப்புராணம்.

அருளெனுங் கடன்முகந் தடியர் சிந்தையாம்
பொருள்பெறு நிலஞ்சிவ போக முற்றிட
வரமழை யுதவுசெவ் வந்தி யானையின்
திருவடி யிணைமலர் சென்னி சேர்த்துவாம். ௩௧

### கந்தபுராணச்சுருக்கம்.

மாவேலை யாலமதை யடக்கித் தன்னுண்
மண்டுலக மண்டமெலாம் வளர்ந்து தானோர்
காவேயின் முன்னுதித்த அரசிற் றோன்றிக்
கடம்புனை குருந்தினுக்குத் துணைய தாகித்
தூவேதந் தலைகாண்டற் கரிய தாகித்
துன்பமுறு பிறவியெனுந் துகள்சேர் வெய்யி
லாவேனைத் தன்னடியா நிழலிற் சேர்த்த
அத்திதனைப் பத்திசெய்து முத்தி சேர்வாம். ௩௨

### காஞ்சிப்புராணம்.

விழிமலர்ப்பூ சனையுஞற்றித் திருநெடுமால்
பெறுமாழி மீள வாங்கி
வழியொழுகாச் சலந்தரன்மெய்க் குருதிபடி
முடைநாற்ற மாறு மாற்றால்
பொழிமதநீர் விரையேற்றி விகடநடப்
பூசைகொண்டு புதிதா நல்கிப்
பழிதபுதன் றாதையினும் புகழ்படைத்த
மதமாவைப் பணிதல் செய்வாம். ௩௩

### விநாயகபுராணம்.

அகரமென அறிவாகி யுலக மெங்கும்
அமர்ந்தகா வுகாமக ரங்கள் தம்மால்
பகருமொரு முதலாகி வேறு மாகிப்
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில்பொருள் நான்கினையும் இடர்தீர்ந் தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல் லார்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்.

### திருத்தணிகைப்புராணம்.

பண்ணிய மேந்துங் காந்தனக் காக்கிப்
பானிலா மருப்பமர் திருக்கை
விண்ணவர்க் காக்கி யாதனக் கலச
வியன்காந் தந்தைதாய்க் காக்கிக்
கண்ணிலா ணவவெங் கரிபிணித் தடக்கிக்
கரிசினேற் கிருகையு மாக்கும்
அண்ணலைத் தணிகை வரைவள ராபச்
சகாயனை யகந்தழீஇக் களிப்பாம். ௩௫

### திருச்செந்தூர்ப்புராணம்.

ஊற்றெ டுத்துவண் டோலிடு மும்மதத்
தாற்றொ ழுக்கி னருவியஞ் சாரல்வா
யேற்று கைக்கு மிறைவற்கு முந்திய
மாற்றி லாக்களி யானையை வாழ்த்துவாம். ௩௬

### சரபபுராணம்.

சிந்தையிடர்க் கடனீந்திச் சிவானந்த
முணர்ந்திடவுஞ் சிவானு பூதிப்
பந்தமுறச் சிவானந்தப் பரவையிடைப்
படிந்திடவும் பற்று நல்கும்

இந்திரியப் பகைதடிந்தி யானெனது
நீங்குமவ ரிதய மேவும்
ஐந்துகரத் தந்திமுகத் தெந்தையிரு
பதாம்புயங்க ளகத்துள் வைப்பாம். ௩௭

## சிவராத்திரிப்புராணம்.

ஓங்குமொரு மருப்பானை யுயிர்க்குயிரா
யிருப்பானை யுரகவேந்தன்
தாங்குநெடு நிலத்தானை முகத்தானை
வதைத்தானைச் சயில மானைப்
பாங்குவைத்து மழுத்தானை பரித்தான்றந்
தளித்தானைப் பசும்பொற் றேட்டுப்
பூங்கமல பதத்தானைப் பொருவிலைந்து
கரத்தானைப் போற்றல் செய்வாம். ௩௮

சொற்பகர்நா வினுக்கடங்கா வளங்குலவு
தில்லைமன்றிற் றுலங்கு கோயிற்
பொற்பகலாக் குடபுலக்கோ புரத்தமரர்
கணத்தலைவர் போற்ற மேவி
அற்பகனுண் மலரிறைத்துத் தொழுமடியார்
கேட்டவர மளித்த லாலே
கற்பகநா மம்பெறுமே ரம்பனையோர்
கொம்பனையுட் கருதி வாழ்வாம். ௩௯

## திருவேற்காட்டுப்புராணம்.

அண்டரிடர்க் கடல்சுருக்கி யசுரரிடர்க்
கடல்பெருக்கி யவனி வாரி
உண்டவனைக் கழங்கெனவே யோடியெடுத்
தெறிந்தாடி யுமையாள் கேள்வன்

தொண்டர்களன் பளிமூான்று துதைந்திடவே
கருணைமதஞ் சொரியா நின்றே
கொண்டல்விளங் கெழில்காட்டுங் குஞ்சரன்தாள்
நிதமுடிமேற் கொள்ளு வாமே. ௪0

சானந்தகணேசர்புராணம்.

மறைமுடிக் கரிய வெங்கோன் வளர்சடைத் தரங்க நீரை
முறைமுறை புழைக்க ரத்தான் முகந்துவிண் ணவர்கண்மீது
நிறைமகிழ் பூப்பத் தூவு நெடுமதக் களிநல் யானை
நறைகமழ் கமலத் தாளை நாடொறு மிறைஞ்சல் செய்வாம்.

கணேசபுராணம்.

சீர்பூத்த கோகனத மலரயன்மா
லாதியராந் தேவாய் மிக்க
வேர்பூத்த சிருட்டிமுதற் றொழிலவைக்குக்
காரணமா யிலங்கா நின்ற
பேர்பூத்த மறைமுடியி னொளிர்குடிலை
தனிலுதித்த பெருமா னுகுங்
கார்பூத்த மதகளிற்று முகக்கடவுள்
அடிக்கமலங் கருத்துள் வைப்பாம். ௪௨

திருமயிலைப்புராணம்.

கஞ்சரா னநத்தவர் கதிர்பொங் காழிகா
னஞ்சரா னநத்தவர் நாளும் வாழ்த்திடுங்
குஞ்சரா னநப்பெருங் கோவின் பொற்சரண்
வஞ்சரா னநற்கவி வழாது போற்றுவாம். ௪௩

திருவொற்றியூர்ப் புராணம்.

விலகருமென் னெடுந்துயரம் விளைப்பயில்வு மென்மனத்தி
னிலகியெழு புன்றொடையு மெளிதின்முடிப் பதுகுறித்துப்

பலர்புகழு மொற்றியூர்ப் பருமணிப்பொற் கோபுரத்திற்
குலவியமுக் கட்களிற்றுக் குணலயன்றாள் குறிக்கொள்வாம்.

திருவாலங்காட்டுப்புராணம்.

நீர்விளை யாட்டிற் றீம்பாற் கடலிடை நெடுங்கை நீட்டிக்
கார்நிறத் தவனை வெள்ளை யரவொடு கலந்து வாரிச்
சீர்தரு விசும்பின் வீசத் திங்களு மறுவு மென்னப் [வாம்.
பேர்தரு மாலங் காட்டுப் பிள்ளைதாள் வணக்கஞ் செய்

பவானிகூடற்புராணம்.

நல்லவை நீடி மல்கத் தீயவை நலிய நாயேன்
சொல்லவை நல்லோர் சூழல் துலங்கிடத் திருநணுவாழ்
வல்லபை யிடத்து வைத்த வாரண முகவன் றெய்வப்
பல்லவ மருட்டும் பைம்பொற் பதயுகம் பணிதல் செய்வாம்.

திருச்சுழியற்புராணம்.

காமனைப்போற் கரும்பெடுத்துத் தருமனைப்போற்
கயிறேந்திக் கமழ்பூங் கொன்றைத்
தாமனைப்போன் மதிசூடித் தம்பியைப்போன்
முகமாறுந் தகைமை பூண்டு
மாமனைப்போற் கோடேந்திக் குறுமுனிபோற்
கடலையெலாம் வாரித் துய்த்துப்
பூமனைப்போ லெழிதிவைக்கும் புகழுடைவே
லடிக்களிற்றைப் போற்றல் செய்வாம். சஎ

திருக்குற்றலப்புராணம்.

புயல்காட்டும் பனிவரையின் பிடிதழுவுஞ்
சிவவேழம் பொருப்பில் வானில்
இயல்காட்டு மிருபிடிசேர் முந்நாலு
துதிக்கையன்முன் னீன்ற ஞானச்

செயல்காட்டு மொருகோட்டி னிருகோட்டு
வெண்பிறைவாழ் செக்கர் வானை
மயல்காட்டுந் திருமேனி மழைமதச்சண்
பகக்களிற்றை மனத்துள் வைப்பாம். சஅ

### திருநெல்வேலிப்புராணம்.

கல்லாத மூடனுக்குங் கல்விதரும் கற்றறிந்தோர்
எல்லாரு மனமகிழ விசைத்தமிழி னியல்புதரும்
நல்லாரை யுறவாக்கும் நலந்தருநன் னெறியுதவும்
பொல்லாத வினைதீர்க்கும் பொல்லாத குஞ்சரமே. சகூ

### மயூராசலபுராணம்.

பத்திவிஞ ணசலமராப் படைத்தபரா
னருண்முன்னோன் பனைக்கை வன்கோட்
டத்திவிஞ சம்பெறவே யொருகோட்டாற்
றடிந்துவள மமரர்க் கீந்து
முத்திவிஞ வியமுனிவர்க் கருள்புரிந்து
மயிலைமலை முகட்டில் வாழுஞ்
சித்திவிநா யகனடியை நித்தியநாந்
தொழுதுபவஞ் சிதைத்தல் செய்வாம். ருo

### திருப்பெருந்துறைப்புராணம்.

இலவுவந்த செவ்வாயெம் பெருமாட்டி
பார்வையொடு மிருக்கு முன்னூல்
சொலவுவந்த நம்பெருமான் பார்வையுமேற்
றமர்சிறப்புத் தோற்றி யாங்குப்
பலவுவந்த பொழில்வளஞ்சால் குருந்துறையும்
பெருந்துறையிற் பண்பு கூரும்
நிலவுவந்த முடியினெடும் வெயிலுவந்த
மெய்க்களிற்றை நினைந்து வாழ்வாம். ருக

### திருக்குடந்தைப்புராணம்.

ஆணுருவும் பெண்ணுருவு மாயவுல
 கந்தோற்று மறிவ னென்றற்
காணுருவும் பெண்ணுருவு மொருமருப்பு
 முகத்தேயாய்ந் தமையா வண்ணம்
ஆணுருவும் பெண்ணுருவு முள்ளாரென்
 றுணர்தாற்கோ ரணங்கோர் பாற்கொண்
டாணுருவும் பெண்ணுருவுந் தொழுதெழவீற்
 றிருப்பாருக் கன்பு செய்வாம். ருஉ

### மாயூரப்புராணம்.

உயர்திணையு மஃறிணையு மாயவொரு
 திருவுருவ முற்று மேயும்
பெயர்வில்கரு ணைக்கிணங்க வவ்விரண்டு
 திணையுயிரும் பேணித் தாங்கல்
அயர்வுலகந் தெரிப்பவிள மதியுமுது
 வரவுமுடி யலங்கத் தாங்கி
மயர்வுதப வீற்றிருக்கு மகத்தியவா
 ரணத்தடிகள் வணக்கஞ் செய்வாம். ருங

### திருவாளொளிபுற்றூர்ப்புராணம்.

படைப்பவன் படைக்கும் போதும்
 பரிப்பவன் பரிக்கும் போதுந்
துடைப்பவன் றுடைக்கும் போதுந்
 துதிகமழ் பூசை யாற்ற
வுடைப்பவ னுடைக்கு மூற்றை
 யுற்றவெஞ் சன்ம வாயில்
அடைப்பவன் சித்தி நாமத்
 தண்ணலை யெண்ணு வாமே. ருச

## கோயிலூர்ப்புராணம்.

அடைபவர்க டவிர்கோசங் கரங்காட்ட
வதற்கமைசா தனந்தோள் காட்ட
வுடைதருகீ ழவத்தைவிழி காட்டமே
லவத்தைமத வூற்றங் காட்ட
நடைகெழுமற் றவர்புரியும் பாவனையை
மருப்பெடுத்து நன்கு காட்டத்
தடைதவிர்பே ரருள்கொழிக்கும் வன்னிவிநா
யகர்மலர்த்தாள் சார்ந்து வாழ்வாம். ருரு

## சூதசங்கிதை.

பொருள்படு பிரண வத்தின்
பொருளொரு தானே யென்று
மருள்செறி மனத்தி னூரும்
வயங்குற வுணர்பாக் கம்பொற்
சுருள்விரி கடுக்கை வாசத்
தொங்கல்செஞ் சடையிற் சூடும்
அருள்பொழி முக்க ணல்வா
யைங்கரக் களிற்றை யுள்வாம். ருசு

ஆரணமா கமம்பரவு மமலனு னந்தனருள்
பூரணமாம் பரம்பொருளைப் புண்ணியர்கள் பெருவாழ்வை
காரணமா வெத்தொழிற்குங் கதிக்குமொரு செழுஞ்சுடரை
வாரணமா முகத்தேவை வணங்கிவளம் பெற்றிடுவாம். ருஎ

## புள்ளிருக்குவேளூர்ப்புராணம்.

முத்திவிநா யகன்மகிழு மன்பனுக்கிவ்
வுலகினிருண் முழுது நீக்கும்
அத்திவிநா யகனெனவே யகத்திருளை
நீக்குவர மளித்து மன்னும்

எத்திவிநா யகன்மேலாஞ் சிவஞானச்
செல்வனிவ னெனவே செய்யுஞ்
சித்திவிநா யகன்வேளூர்க் குடவறைவி
நாயகன்றாள் சிரமேற் கொள்வாம். ருஅ

## திருவேரகப்புராணம்.

பெற்றபரன் றாழ்சடைக்கா னகத்துலவி
வெள்ளநதிப் பெருநீ ராடிச்
சுற்றுமெழில் வல்லபையின் றுணைமுலைக்கோ
டுழக்கிவினைத் துருமஞ் சாடிப்
பற்றுமறைக் கூடத்தி னணைந்தடியர்
மனத்தறியிற் பரிவிற் சாரும்
ஒற்றைமருப் பிருசெவிமும் மதநால்வாய்
மழகளிற்றை யுன்னி வாழ்வாம். ருகூ

## பழனிப்புராணம்.

வீதி வேழமா வுலாவுமா வினன்குடி வேதம்
ஓதி வேழமா மூலமென் றுரைத்தவன் போற்றும்
ஆதி வேழமா தொருபிடி யாகவந் துதித்த
சோதி வேழமா முகவனைத் துதித்திடல் செய்வாம். சுo

## திருநாவலூர்ப்புராணம்.

அற்பகலு நினைக்குமடி யவர்பிறவி
யெனுமிருளை யகற்று ஞான
நற்பகலோ னெனுமொருவி நாயகனை
யைங்கரனை நகுபொன் மேரு
விற்பகவ னுமைமகனை வேலவற்கு
முன்னவனை விண்ணோர் போற்றுங்
கற்பகவி நாயகனைக் கைதொழுவார்
வினைக்கடலைக் கடந்துய் வாரால். சுக

## திருப்பனந்தாட்புராணம்.

மருவிவரும் பிறவியெனும் வேலைதனைக்
கலக்கிவினை வனத்தைச் சாடிக்
கருதரிய தமியன்மனத் திருந்துதமிழ்
மதம்பொழியுங் கருணை யாளன்
அருமறையுந் தொழவரிய வைந்துகரன்
றெருந்திவயிற் றண்ண லான
பெருகுவளத் திருப்பனந்தா ளாண்டபிள்ளை
யருட்பாதம் பேணி வாழ்வாம். ௬௨

## கடம்பவனபுராணம்.

கதத்தானை நீண்டகுரா கதத்தானை
யிராவணனைக் கடிந்தோன் காணுப்
பதத்தானை முதலினர்முற் பதத்தானை
வெள்ளையிபப் பாகன் போற்றும்
இதத்தானைப் பொறியிலர்கட் கிதத்தானைக்
கடம்பவனத் திருக்குந் தேவை
மதத்தானை முகனைவென்ற மதத்தானை
முகத்தானை வணக்கஞ் செய்வாம். ௬௩

## திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.

வானெழுகு முகின்மேனி வேதன் தேட
மதுரைநா யகனடியார் வினைகள் தீர்ப்பான்
ஊனெழுகு புரம்படைத்த மக்கள் போல்வந்
துலாவுதிரு விளையாடற் பனுவல் சொல்லக்
கூனெழுகு பிறைக்கோட்டுப் பனைக்கை நால்வாய்க்
குடவுதரச் செழும்பவளக் குன்றம் போலத்
தேனெழுகு மலர்க்கடம்ப வனத்து லாவு
சித்திவிநா யகனிருதாள் சென்னி சேர்ப்பாம். ௬௪

### திருவாதவூரர் புராணம்.

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோல்
பரந்தநீற் றழகுபச் சுடம்பில்
திவளமா துடனின்றுடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் ருெடித்தொரு கரத்தில்
தரித்துயர் கிரிப்புரத் தெழுதுங்
கவளமா களிற்றின் திருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம். கூரு

### வீரவனப் புராணம்.

சீர்பூத்த பொதுவடியர் சிறப்படியர்
பாற்பொதுவுஞ் சிறப்பு நாளுங்
கூர்பூத்த வவருயிரா மெய்ப்புணர்வு
மாய்ப்பொலிதல் குறிப்பிற் ருேன்ற
நார்பூத்த பொதுச்சிறப்புப் புணரெழுத்தா
லாமழகு நாமம் பூண்டு
கார்பூத்த வீரவனத் தமர்கடாக்
களிற்றினடி கருதி வாழ்வாம். கூசா

### திருவானைக்காப்புராணம்.

நிலம்போற்றும் பனிக்கிரண நிலாவணிந்த
நாயகனுர் நிருதர் வாழுஞ்
சலம்போற்று மதில்பொடித்த ஞான்றினிய
பூசனைகள் சால வாற்றிப்
புலம்போற்று மெய்யடியார் விநாயகனென்
றியம்புபதப் பொருளை நாட்டி
வலம்போற்று மணியிரத மூர்ந்தமழ
விளங்களிற்றை வணக்கஞ் செய்வாம். கூஎ

---

## சிவஞானசித்தியார்.

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
        னால்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
        தருமொருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி யோவாதே
        யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன் திருமால் செல்வமுமொன்
        றோவென்னச் செய்யுந் தேவே. ௬அ

## சிவரகசியம்.

பொன்னிமயப் பிடியானை தருமானை
        முகத்தானைப் பொருவி லானைச்
சொன்னயஞ்சேர் தாரகத்தி னுருவானை
        யன்பருளச் சோதி யானைச்
சென்னியிலா றுடையானைத் தந்தையெனப்
        படைத்தானைத் திகழோ ராறு
மன்னுமுகன் துணையானை வல்லபையின்
        பத்தானை வணங்கி வாழ்வாம். ௬௯

## அதிரகசியம்.

மோகமெனுங் கடல்கடந்து முத்தியெனுங்
        கரைகாண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனு மலர்கொண்டு பத்தியெனும்
        புனலாட்டிப் பரிந்து சாத்திச்
சோகமெனப் பாவித்துத் துரியமெனும்
        விளக்கேற்றிச் சோக நீங்கி
ஆகமெனுங் கோயிலின்க ணறிவென்னுங்
        கணபதிக்கே யன்பு செய்வாம். ௭0

### பரமரகசியசடஸ்தலம்.

வாக்கொடு நினைவுக் கெட்டா வளரொளி யாகி யைந்து
பாக்கியத் தலைவி யாகும் பராபரை யிடத்திற் றேன்றி
நீக்கருங் களிப்பி னாலே நிலைபெற வுலகெ லாமுண் [வாம்.
டாக்குமும் மதத்தோ னெந்தை யடியிணை தலைமேற் கொள்

---

### சித்திபுத்திகள் வணக்கம்.

#### விநாயகபுராணம்.

கருணைமதம் பொழிமுகத்துக் கணேசரவர்
தமக்கறிவுந் தொழிலு மான
அருளெனுமுண் மையையெவரு மறியவவ
ருமையினவ தரித்த தொன்றும்
ஒருமுனியோம் பியதழலி னவதரித்த
தொன்றுமுட னாகித் தோன்றித்
திருவுளத்தின் வழிநிற்குஞ் சித்திபுத்தி
யெனுமிவர்தாள் சென்னி சேர்ப்பாம். எஉ



## கந்தபுராணச் சுருக்

### மூலமும் பொழிப்புரையும் விருத்தியும்

இந்நூல் ஸ்ரீமத் - சம்பந்தசரணாலய சுவாமிகளால் சொற பொருட்சுவை, சந்தச்சுவை முதலியன ததும்ப 1000 பாடல்கள பாடப்பட்டது. பரந்து கிடக்கும் பெரிய கந்தபுராணக் கதையை இனிது விளக்குவது. மூலத்திற்கேற்ற பொழிப்புரையும், விருத்தியும் பலநூற் பிரமாணங்களுடனே எழுதப்பட்டுள்ளன. டிம்மி 8-பக்க அளவில் நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டது. 496 பக்கங்கொண்டது. கலிகோ பயிண்டு விலை ரூபா 3.

---

## முருகவேள் பனுவல் திரட்டு

### சுப்பிரமணியபக்தர்கள் பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்

இதில், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ், திருப்போரூர் சந்நிதிமுறை, திருத்தணிகை சந்நிதி முறை, கந்தபுராணம், தணிகைப்புராணம், திருச்செந்தூர்ப் புராணம் முதலிய நூல்கள் அடங்கியிருக்கின்றன. கலிகோ பயிண்டு ரூபா 1.

---

## முருகன் திருவருட்பா

வடலூர் - இராமலிங்க சுவாமிகள் அருளிச் செய்தது; திருவருட் வில் ஐந்தாந் திருமுறையாகத் திகழ்வது. இராமலிங்க சுவாமிகள் நவருட்பேறு குறித்துத் திருத்தணிகையில் முருகப் பெருமான் ன்னிலையில் "அழுத அழுகை" இந்நூலில் தேங்கி வழிகிறது. "முருகன் திருவருட்பா" கருங்கல் மனதையும் கரைத்துக் கரைத்து இளகச் செய்யும்; திருவருட்பேற்றில் காதல் எழுப்பும். அதை ஒரு கால் ஓதுவோரும் அன்பராதல் ஒருதலை. விலை அணா 8.

திருப்போரூர்ச் சந்நிதிமுறைத் திரட்டும், அரும்பத உரையும்
கிளேஸ் அணா 0 5 ரப் 0 3

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் முதல் திருமுறை ... 0 1

சிவபுண்ணியத் தெளிவு ... ... ... 0

---

## குசேலோபாக்கியானம்

### மூலமும் விசேட அரும்பத உரையும்

கிளேஸ் கடிதத்தில் அழகாக அச்சிடப்பட்டுள்ளது. இரண்டாம் பதிப்பு, ஸ்டிப் பைண்டு விலை ரூபா 1 4 0.

**முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை**